லொருபெயர்தந்தனம்வீரசண்முகனென்றெனவுரைத்தா
னுவமையில்லான் (33)
எனவுரைத்ததந்தைதனையிறைஞ்சிவடிவேற்குகவே
ளிசைப்பானெந்தாய் [று
மனதிடையோரையமெனக்குளதஃதென்னெனின்மூன்
வையஞ்சென் றுங் [ா
கனமருவுமிலிங்கமொன் றுங்கண்டிலனென்முன் னுதித்தே
ன்கண்டுபூசித்
தனனிவண்மாலிங்கமதையேதுவிதற்கெவனெனக்குச்
சாற்றுயென்றான். (34)

ஐயமறவிவ்விலிங்கமேநமதுவடிவமென
வறிவுற்றைந்து
கையனெமையன்பொடுபூசித்ததனுலித்தலத்தே
ண்டானீதான்
றுய்யவவனினுமுயர்ந்தோனென் றுசெருக்குற்றதனுற்
றுலங்குமூன் று
வையமெலற்றினுந்தேடிக்கண்டிலையாலேதுவிது
மதலாயென்றான். (35)

திருத்தகுமூவுலகனைத்துந்தேடியுங்காணுமலுளந்
திகைத்துநீதான்
வருத்தமடைந்தமைபுணர்ந்துகாட்டினமித்தலத்திடை
யிம்மாலிங்கத்தைக்
கருத்தினருள்சுரந்துநினக்கெனவுரைத்துப்பின்னரொ
ன் றுகழறுவானுற்
பருத்தவரைச்சிலைப்பெருமான் றனதிருநற்புதல்வ
ரையும்பார்த்துமாதோ. (36)

---

34 பூசித்தனன்-உயர்திணையாண்பாலொருமைப்படர்க்கையிறந்தகாலவினைமுற்று பூசித்தானென்பது பொருள்.

கலித்துறை.

செம்மைசேர்தெரிசனமுமக்களித்தனஞ்சிறிது
மும்மைநேர்பவரொருவருமிலையெமையலலான்
மும்மைமாநிலத்திடையெனமொழிந்துருக்கரந்தா
னெம்மைநாடொறுமன்பொடுபுரந்தருளிறையோன். (37)

கணபதிகுமான் பூசித்தசருக்க

முற்றிற்று.

ஆகச் சருக்கம்-13க்கு-விருத்தம்-441.

எட்டாவது

## சிவராத்திரிவிரதவியல்புரைத்தசருக்கம்.

தீ.—அறுசீர்விருத்தம்.

நற்றவமகலாத்தூயநைமிசாரணியந்தன்னி
லுற்றமாமுனிவர்கேட்பவுயர்சிவநிசியின்மேன்மைப்
பெற்றிகளனைத்துமந்தப்பெரும்புகழ்க்கலைகள்யாவுங்
கற்றுணர்சூதன்சொன்னகதைசிறிதெடுத்துச்சொல்வாம். (1)

கலிவிருத்தம்.

சீதமாருவரிசூழ்செகமெலாம்புகழ்தருஞ்
சூதமாமுனிபதந்தொழுதுமாபதியெனு
நாதன்மேலன்பறுநைமிசாரணியம்வாழ்
வேதமாதவரெலாம்வினவுவாரொன்றரோ. (2)

சீலமேபெறுதிருச்சிவவிராவிரதமே
மேலதாந்தூயமாவிரதம்யாவற்றினுந்
தாலமீதென்றுநீசாற்றினுய்மேலதென்
றேலவேபகருதற்கேதுவென்னென்றனர். (3)

ஏதுவென்னென்றமாமுனிவருக்கினிதுவந்
தோதுவன்சூதன்முன்னொருதினந்தனினறுந்

தாதுறுந்துளவனுஞ்சதுமறைக்கிழவனுங்
காதுவெம்போர்செய்தார்கருவமேலிட்டுளார். (4)

விண்ணுளோர்யாவரும்வெருவுறக்கொடியபோர்
பண்ணுமவ்வேலையிற்பைங்களாநீழல்வா
ழண்ணலங்கவர்செருக்கினையடக்குதுமென
வெண்ணினன் றனதுநற்றிருவுளத்திடையரோ. (5)

எம்பிரானவ்விலிங்கத்தினின்றெரியழற்
றம்பமாய்நின் றனன்சாருமோர்நாளிடைக்
கும்புடன்றோன் றுபல்கோடிசூரியரெனப்
பம்புசெஞ்சோதியெவ்வுலகமும்பரவவே. (6)

அறுசீர்விருத்தம்.

கடிகமழும்பசுந்துளவத்திருமாலுமலரயனுங் கண்ணுற்றாங்கே
யடிமுடிதேடினர்காணுதுளமயர்வுற்றிருந்தனரா லந்தவேலை
பொடியணியுந்திருமேனிப்புனிதனவர்க்கெதிரிமை யோர்புடைசூழ்ந்தேத்த
நெடியதிருவருள்சுரந்துசுயவடிவத்தொடுதோன்றி நின்றான்மன்னோ. (7)

நின்றதனிப்பரம்பொருளவ்விருவரையன்பொடுநோக்கி நீர்தாமீங்கே
யின்றுதுயிலுணவுதவிர்ந்தெமதுதெரிசனம்பெறலா லிற்றைநாட்பேர்
நன்றிபெறுசிவநிசியாமித்தினத்தின்மாவிரத நயந்தோர்யாரு
மொன்றுவரெப்பாவமுந்தீர்ந்துயர்வுறுசாயுச்சியமென் றுரைசெய்தானல். (8)

---

5. எனு-செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் என்று என்பது பொருள்.

ஆதலினுவிச்சிவராத்திரிவிரதமிகச்சிறந்த
தனைத்தினுள்ளு
மாதவத்தீரிவ்விரதந்தனையனுட்டித்திடுமியல்பும்
வழுத்தக்கேண்மி
ஞேதமுதனுளடிசிலொருவேளையருந்திமன
வொருமையுற்றுத்
தீதில்சிவராத்திரியாமத்தினத்திலிரவியெழுந்
திடுமுன்மாதோ. (9)

பத்தியுடனேயெழுந்தாகமவிதியின்படிநதியிற்
படிந்துமேலாஞ்
சுத்திகொள்வெண்பொடிதிரிபுண்டரமாகத்தரித்துமிகத்
துலங்குமெய்யிற்
சித்தியளித்திடுமுருத்திராக்கமணிந்துணவொடுநித்
திரையகற்றி
யத்தினமற்புதமூலமானசிவலிங்கமதையா
தன்மாதோ. (10)

புற்றுமண்கோமயமுதலாகியவிலிங்கங்களையாதல்
பூசித்தேயன்
புற்றபிடேகம்புரிந்துகுங்குமஞ்சந்தனங்களப
மொளிருந்தூய
நற்றனிமாமலர்கனிகணறுந்தூபதீபமுத
னவிலத்தக்க
மற்றெவையுங்கொடுசதுர்ச்சாமந்தொறும்பூசித்திடுக
மகிழ்ந்துமன்னே. (11)

வருமறுநாடனிலருணோதயகாலம்புனல்படிந்து
மறுத்தீர்நித்ய

9. அடிசில்-சோறு.
11. கொண்டென்பது-கொடுவெனநின்றது செய்யுள் விகாரம்.

கருமவனுட்டானமுடித்துண்ணுமாதந்தொறுமுட்
கனிந்திவ்வண்ணர்
தருபுனிதவபரபக்கச்சதுர்த்தசியிற்செயும்விரதந்
தனையிப்பாரிற்
பொருவருங்கேவலசிவராத்திரியெனத்தேர்ந்திடுபெரி
யோர்புகலுவாரால். (12)

மதிதொறுமிவ்விரதமனுட்டித்துவரலரிதெனிலோர்
வருடந்தன்னிற்
றுதிமருவுகும்பரவியபரபக்கச் சதுர்த்தசியிற்
கூறுமிந்த
விதிபெறுநல்விரதமனுட்டித்துவரல்வேண்டுமிந்த
விரதந்தன்னை
யெதிறுமகாசிவராத்திரிவிரதமெனப்புவியி
லிசைப்பர்மேலோர். (13)

வேறு

செப்புசிவராத்திரிவிரதஞ்சிரத்தையொடு
வற்சரந்தோறு
மிப்புவியின்மீதனுட்டிப்போரெல்லாவிரதப்
பலனுமுற்றுத்
தப்பின்மனத்தானினைத்தவெல்லாந்தாமேயெய்தி
மறுமைதனி
லொப்பில்சிவசாயுச்சியமென்றுரைக்கும்பதமும்
பெறுவாரால். (14)

உவரார்கலிசூழ்புவியின்மிசையுயர்வானுலகத்
திமையவராற்
றவராற்புகழுமிவ்விரதந்தன்னையனுட்டித்
திடுதலின்றிச்

14. வற்சரம்-வருடம்.

சிவராத்திரியென்றுரைத்திடுமித்தினத்திலனத்தைப்
புசிப்பவர்தா
மெவராயினுமற்றவரோநாயிறைச்சிதனையுண்
டவராவார். (15)

கலித்துறை.

சிறப்புறுஞ்சிவநிசியெனுந்தினத்தின்மாவிரத
மறப்பிலாமலன்புடனனுட்டித்திடுமோட்சி
யுறப்பெறாதவர்பிறப்புநீளுலகிடையெந்தப்
பிறப்பினுங்கடைப்பிறப்பெனப்பேசுவர்பெரியோர். (16)

சிவராத்திரிவிரதவியல்புரைத்த சருக்கம்.

முற்றிற்று.

ஆகச் சருக்கம்-14-க்கு-விருத்தம்-457.

ஒன்பதாவது

## பஞ்சலிங்கதெரிசனம்பெற்ற சருக்கம்.

நீ.—கலிவிருத்தம்.

நற்றுழாயணிநாதனும்வேதனுங்
கற்றைவார்சடையீசன்கருணையா
லுற்றபஞ்சலிங்கத்தையுணர்ந்திடப்
பெற்றதோர்கதைபேசுதும்யாமரோ. (1)

வேறு

முந்தையொருநாளதனின்முண்டகநறும்பூ
வுந்தியிடைவந்துலகம்யாவையுமொருங்கே
தந்தபிரமன்றனியிருந்துநனிதானே
சிந்தையறவொன்றுளநினைந்தனன்வியந்தே. (2)

பங்கமறுமிப்புவிபடைக்குமுனிருந்த
தெங்கெவணிருந்துபினர்வந்ததிதுவென்று

சங்கையுறுநெஞ்சமொடுசார்ந்தனனறும்பூ
மங்கைபுணர்செங்கணெடுமாதவனிடத்தே. (3)

காமருபயோததியிடைப்பருவகால
மாமுகில்படிந்ததுகிடந்ததெனவைகித்
தாமரைநெடுங்கண்வளர்கின்றபுனிதன்றன்
மாமலரடித்திணைவணங்கியுரைசெய்வான். (4)

எண்சீர்விருத்தம்.

கதித்ததிரைப்பாற்கடலில்யாவுமோர்ந்து
கண்வளரும்பெருங்கருணைக்கடலேபின்ஞான்
றுதித்ததெனதுளத்தினிடையையமொன்றென்
னுளத்துறுமவ்வையமதையொழிக்கும்வண்ண
மதித்துனதுசன்னிதிவந்தடைந்தேனிந்த
வையகமெவ்விடத்திருந்துவந்ததான்முன்
விதித்தவஃதிருந்ததுதானெங்குநன்கு
விளங்கவெனக்கருள்புரிதல்வேண்டுமென்றான். (5)

கலிப்பா.

மெய்யுற்றவேதன்விளம்புமொழிதான்கேட்டு
மையுற்றமேனியுடைமாதவனப்போதுநின்போ
லையுற்றநெஞ்சேனறிந்திலேன்யானுமினிப்
பையுற்றபூணணிந்தோன்பாலுற்றிடுதுமென்றான். (6)

கன்றால்விளவின்கனியுகுத்தமாயவனுங்
குன்றாமணங்கமழ்செங்கோகனகப்புத்தேளுஞ்
சென்றாரொருநால்வருக்குபதேசித்திடுவா
னன்றாலிருந்தோனமர்கயிலைநோக்கியரோ. (7)

பொங்குபுகழ்விண்ணோர்புடைசூழ்ந்தினிதிறைஞ்ச
விங்கிதயாழ்வல்லோரிசைத்தேன்செவிமடுப்பப்

3. சங்கை-சந்தேகம்.
4. காமர்-அழகு. சாரியையிடைச்சொல்-பயோத்தி பாற்கடல் முகில்மேகம்.

பங்கம்றவெவ்வுலகுமீன் றபசுங்கொடியோ
டங்கயிலேவீ ற்றிருந்தவண்ணலேக்கண் ணுற்றனரால். (8)

போற்றினர்சென்னிபுனேந்தாரடிமலரை
யேற்றினரன்பைத்தமதுமனத்தெண்ணமதைச்
சாற்றினரன்னேர்தமைநோக்கிறுங்கருத்தைத்
தேற்றுவாம்பின்னரொன்றுகேண்மினெனச்செப்புவனுல்.

சித்துருவமரபுரமென்ருேதுந்திருத்தலத்திற்
பத்தியுடனெய்திப்பசும்பூங்களாவனம்வாழ்
வித்தகமாலிங்கமதைவேண்டிமிகப்பூசைபுரிந்
தத்தலநீருற்றிடுமின்சின்னுளெனவறைந்தான். (10)

அறுசீர்விருத்தம்.

சிந்தையினுவகைகூர்ந்துதிருநெடுஞ்செங்கண்மாலுங்
கந்தமார்செய்யபூம்பங்கயத்தவிசுறைபுந்தேவு
மந்தமாதலத்திலெய்தியருட்சிவலிங்கந்தன்னேப்
புந்தியன்பொடுபூசித்துப்போற்றியங்கிருந்தார்சின்னுள். (11)

தேன்றிகழ்மலர்ப்பூஞ்சோலேச்சித்துருநகரத்தன்னே
ரேன்றபத்தியினுற்பூசித்தின்னணமிருக்குங்காலே
யான்றமூவுலகுமீன்றவதுலசுந்தரியினேடு
தோன்றினனவர்முன்னந்தச்சோதிலிங்கத்தினின்றே. (12)

கலிவிருத்தம்.

பாடினர்நற்பரவசமாகநின்
ருடினர்மனத்தன்பிற்புளகமெயம்
மூடினரிருமுண்டகத்தாள்சிரஞ்
சூடினர்மெய்த்துதிபுரிந்தாரரோ. (13)

பூங்களாநிழற்புங்கவனப்பொழு
தோங்குமிப்புவிக்கோர்முதலாகிய
பாங்குசேர்திருப்பஞ்சலிங்கங்களே
யாங்கவர்க்குமெய்யன்புடன்காட்டுவான். (14)

அறுசீர்விருத்தம்.

மருவுதென்றிசையிற்புன்னைவனத்துறுமிவ்விலிங்கம்
பிருதிவிலிங்கமப்பிலிங்கமாம்பிரவனத்து
ணிருதிதிக்குறுமிலிங்கநிகரிலாத்தேயுலிங்கங்
கருதரும்புகழ்சேரிந்தக்களாவனத்துறையிலிங்கம். (15)

வாயுவின்றிசையில்வில்வவனத்துறுமிவ்விலிங்க
மேயுநற்புகழ்கூர்வாயுவிலிங்கமதாகுமிந்தத்
தூயசீர்வாயுத்திக்கிற்றோன்றுமிப்பலாசக்கானி
னேயமுற்றுறையிலிங்கநிகரிலாகாயலிங்கம். (16)

காதலிற்காண்மினென்றுகாட்டினனுரைப்பானிந்த
மேதகுபஞ்சபூதவிகாரமாகியபாரெல்லா
மாதியிற்றோன்றுமிந்தவைந்திலிங்கத்தினின்றிங்
கோதியவிவற்றினுள்ளேயொடுங்குமந்தத்தின்மாதோ. (17)

செப்புமற்றையலிங்கங்கள்சித்துருவானவிந்த
வொப்பறுசோதிலிங்கந்தனிலுதித்திடுமொடுங்குந்
தப்பறமுதலிலீற்றிற்சாற்றுமிவ்விலிங்கந்தானே
யெப்புவிகளுக்குமூலமெனவுணர்ந்திடுகமாதோ. (18)

என்றுதானெம்மான்கூறவிருவருந்தமதுநெஞ்சத்
தோன்றியேயெழுந்துபொங்குமுவகையங்கடலுண்மூழ்கி
மன்றவக்கடலுக்காங்கோர்கரைதனைக்காணார்வாசக்
கொன்றையஞ்சடையான்பொற்றாள்பணிந்திதுகூறலுற்றார். ()

நாதவித்தலத்திற்போந்துநாமிருவேமுமீங்கு
மேதகுஞானம்பெற்றேம்விளம்புதற்கரியபொல்லாப்
பாதகரெனினுமிந்தப்பதியிடையடைந்தோர்யாருங்
கோதறுஞானமெய்தத்திருவருள்கொடுத்தியென்றார். (20)

---

15. ஆம்பிரவனம்-மாவனம்.
19. மன்ற-தேற்றப்பொருளுணர்த்திநின்றதோரிடைச்சொல்.

இரந்தவன்னவருக்கந்தவரமதையினிதுநல்கிக்
கரந்தனனிருந்தானந்தக்கருணைமாவிலிங்கந்தன்னு
ணிரந்தரமடியார்தங்கணெஞ்சிடைவைகியன்னு
ரரந்தைநோயகற்றிக்காக்குமதுலசுந்தரியோடம்மா. (21)

எண்சீர்விருத்தம்.

தக்கபெருந்தவமுடையீருரைத்துமின்னுந்
தனிக்களாவனப்பெருமான்சரிதங்கேண்மின்
றெக்கணதிக்கினிலரையோசனைத்தூரத்திற்
றிகழ்நாகசுனையெனுநற்றீர்த்தமேவு
மிக்கசெழும்புன்னைவனத்திடைமாலோடு
விளங்குருவந்தெரிசிப்பான்விரும்பிமுன்னாண்
முக்கணுமையவண்முனிவர்சங்கபத்மர்
முதியவருந்தவமதனைமுயலுநாளில். (22)

அங்கவர்செய்பெருந்தவத்துக்கிரங்கியேதா
னருமைபெறுதனதுதிருவுருவந்தன்னிற்
செங்கமலவிழித்திருமால்வடிவங்காட்டிச்
சிந்தையுவந்திடக்கருணைசிறப்பநல்கிப்
பங்கமில்கோமதியெனும்பேர்படைத்துமேவும்
பசுங்கொடியினெடுகருவைப்பதிப்பால்வண்ணன்
சங்கரநாரணனெனும்பேரதனைப்பூண்டு
தனிப்பிருதிவிலிங்கமெனத்தானுற்றானல். (23)

திருவுலவுமித்தலத்தினிருதிதிக்கிற்
சிவகங்கையென்னுமொருதீர்த்தத்தோடு
மருவுமுக்கால்யோசனைத்தூரத்திற்சூத
வனமெனுமோர்தலமுளதம்மாதலத்திற்

---

21. நிரந்தரம் எப்போதும்-அரந்தை துன்பம்.
22. உரைத்தும்-சொல்வோம் தம்விகுதியெதிர்காலங்காட்டி நின்றது.
24. சூதவனம்-மாவனம்.

பொருவறுசேரலன்வளவன்வழுதியென்னும்
புகழ்பெறுமூவேந்தருமோர்போதுதங்கள்
பெருவளநாட்டெல்லைகாரணமதாகப்
பெருஞ்சமரம்புரியநினைத்திடுமந்நாளில். (24)

அவ்வரசர்தமக்குநடுநிலைமைதானுற்
றருளுடனவ்வெல்லைவழக்கதுதீர்த்தன்னோர்
வெவ்வியதோரிகலகற்றிப்புரந்தவாற்றுன்
மேன்மையுறுமத்தியத்தனெனும்பேர்பெற்றுச்
செவ்விதிகழகிலாண்டேசுவரியென்னுந்
திருநாமம்படைத்தபரதேவிதன்னோ
டெவ்வுலகும்புகழ்தருமப்பிலிங்கமாக
விருந்தனன்பல்வரமடியார்க்கீந்துமாதோ. (25)

இலகுபெரும்புகழ்பரவும்வாயுத்திக்கி
லின்பமுறுமோரைந்துகுரோசந்தனில்
விலகருஞ்சீர்வில்வவனமென்றுகூறும்
விசேடதலமொன்றுளதால்விளங்குமந்தத்
தலமதின்முப்புரவசுரர்தம்மைவென்று
தங்குமயர்வறவாயுவிலிங்கமாக
வுலவுதிரிபுரத்தீசனெனும்பேர்பெற்
றுவந்திருந்தான்சிவபரிபூரணியோடம்மா. (26)

சீருறும்வானவருமுனிவரும்பல்கோடி
சித்தரும்வந்தனுதினம்பூசித்துப்போற்றும்
பேருளவவ்வில்வவனத்தலத்தின்வாயுப்
பெருந்திசையிலோரைந்துகுரோசந்தனிற்
கோரைநதிதேவிநதியெனப்பேர்வாய்ந்து
குலவுமிருநதிநடுவிற்குறைதீர்மேன்மை

---

26. குரோசம் கூப்பிடுதூரம் ஆல்-அம்மா இரண்டும் அசைநிலை யிடைச்சொற்கள்.

சாருமெழிற்பலாசவனமென்றுந்தேவ
தானமென்றுங்கூறுகின்றதலமொன்றுண்டால். (27)

தேவியுமைபண்டொருநாட்டன்னைநோக்கிச்
செய்ததவத்திநுக்குவரஞ்சிறப்பநல்கிக்
காவிரிநன்ருடனுயர்வழுதியாவி
கவரும்வகையுய்த்தவிடக்கலையைநீக்கி
மாவியனச்சாடைதவிர்த்தவனென்றேது
மாண்புறுபேர்தரித்துவெளியிலிங்கமாகத்
தாவில்புகழ்மேவுதவம்பெற்றுளென்னுந்
தையலுடனிருந்தனனத்தலத்தின்மாதோ. (28)

கிருபைநதிமுதலியபன்மூன்றுதீர்த்தக்
கிளர்பெருமைவாய்ந்துவிராட்டினுக்குமேன்மை
மருவுசுழிமுனைத்தானமாகியோங்கு
மகிமைபெறுமிக்கருவைத்தலத்திலென்றும்
பொருவறுமொப்பனையெனுமம்பிகையினோடு
புவியனைத்தும்புகழ்நேயுலிங்கமாகத்
திருவடிவந்தனைக்கொடுவீற்றிருந்தானெம்மான்
சீர்த்தியுரைத்திடவல்லார்செகத்தில்யாரோ. (29)

பஞ்சலிங்கதெரிசனம்பெற்றசருக்கம்.

முற்றிற்று.

ஆகச் சருக்கம் 15-க்கு விருத்தம்-486.

---

28. விடம்-நஞ்சு கலை ஆடை நஞ்சு ஆடை நச்சாடையென நின்றது.

பத்தாவது

## பாலவண்ணர் திருநாமமுண்டான சருக்கம்—தி,

அகவல் விருத்தம்.

கருப்புவின்மதனைக்காய்ந்தகண்ணுதற்பெருமான்றன்னை
விருப்புடன்பாவியேத்தும்வியன்கவிக்காகமுன்னுண்
மருப்பொலிகளாவனத்தில்வயங்குபால்வண்ணனென்னுந்
திருப்பெயர்படைத்தகாதைதெரிந்தவாறெடுத்துச்சொல்வாம்

காதலிற்சுரரும்யாமுங்கடல்கடைந்ததனிற்றோன்றுங்
கோதறுமமுதெமக்குத்கொடுத்திலர்தாமேயுண்டு
மாதிரத்திமையோர்நம்மைவஞ்சித்தாரெனவன்னோர்பால்
மோதமர்புரிவான்சென்றார்முரணுடையவுணரெல்லாம். (2)

சென்றுபல்காலம்வெம்போர்செயதனரிமையோர்தம்மை
வென்றிலீர்சமரஞ்செய்துமெய்யிளைத்தனரேயன்றிக்
கன்றியமனத்தராகிக்கடவுளர்தம்மைவெல்வா
னென்றியவுபாயம்யாதென்றுளத்திடைநினைத்தார்மன்னோ ()

ஓங்குநங்குரவன்றன்பாலுற்றுநாமுரைத்துமென்னி
னீங்குநங்குறையீதல்லானினைவுவேறிலையென்றுன்னி
யாங்குநற்புகர்பாலெய்தியவனடிக்கமலஞ்சென்னி
தாங்கினருரைக்கலுற்றார்தம்மனக்கருத்தைமாதோ. (4)

எம்மைவஞ்சித்துமுன்னமின்னமுதுண்டவாற்று
லம்மவென்றனரவ்வானோர்தோற்றனமவர்க்குநாமால்
வெம்மைசேர்சமரிலந்தப்பகைஞராய்மேவும்விண்ணோர்
தம்மையாம்வெல்வானையதண்ணருள்புரிதியென்றார். (5)

அங்கவர்தம்மைநோக்கியறைகுவன்றவத்தினாலோர்
பொங்குபாற்றடமமைத்துநமக்கப்பால்பொருந்தவூட்டித்
துங்கவெஞ்சமரிலந்தச்சுடர்முடியிமையோராற்றல்
சிங்கலுற்றழியும்வண்ணந்திறனுமக்களித்தும்யாமால். (6)

---

6. ஆற்றல்-வலிமை. சிங்கல்-கெடுதல். அளித்தும்-கொடுப்போம்.

திடமொடுநீவிர்சென் றுதிருத்தவம்புரிதற்கேற்ற
விடமதுநோக்கிவம்மினெனவுரைத்திடலுமன்றோர்
புடவியெங்கணுமேதேடிப்பொருந்துறுமிடமீதேயென்
றடர்களாவனத்தைநோக்கியாங்குவந்துரைத்தார்மன்னே. (7)

தள்ளருந்திறல்கூர்வெய்யதானவருரைக்கக்கேளா
வுள்ளுவந்தவரோடந்தவுயர்களாவனத்தையெய்தி
யொள்ளியகருணைச்சோதியிலிங்கத்தின்முன்னருற்று
வெள்ளிசெய்தனனற்பன்னாண்மிக்கநற்றவந்தான்மாதோ. (8)

வேறு

கொடியபெருந்திறன்மருவுமவுணர்திருமுடியின்மிசைக்
கொள்ளுஞ்செய்ய
கடிகமழ்பங்கயசரணக்குரவனெனப்புகழ்பெறுமக்
கவிதான்செய்யு
நெடியபெருந்தவமதனுன் மகிழ்வுறவந்துதித்ததவ
ணிகரின்மேன்மைப்
படிபுகழும்படிகிரணம்படியுமணிப்படியுடனோர்
பாற்றடாகம். (9)

சாற்றுறுமவ்வேலைமகபதிமுதல்வானவர்முன்னந்
தமக்குப்போரிற்
றோற்றதயித்தியரமரிற்சயம்பெருவான் றவம்புரிந்து
துலங்கவாங்குப்
பாற்றடமொன் றமைத்துளனவ்வவுணர்குருவெனக்
கடல்சூழ்பாரில்யாரும்
போற்றுதவமுனிவரெலாம்புகழ்தருநாரதமுனிவன்
புகலக்கேட்டார். (10)

அடலுறுமவ்வவுணர்குருவரியபெருந்தவமியற்றி
யதனுல்வந்த

---

8. கவி-சுங்கன். புக்ர்-சுக்கிரன். குரவன்-ஆசான்.

தடமதனினிறைந்தபயந்தனையவுணர் நுகர்வரெனிற்
சமரஞ்செய்வான்
றிடமொடுவந்திடுவரவர்தமையாம்வென்றிடலரிதென்
செய்வேமென்று
கடவுளர்யாவருமனதிற்கவலைநனியடைந்து
திருக்கயிலைபுக்கார் (11)

பயிலுமொருநான்மறையுங்காணரியமகிமைமிகப்
படைத்தநீல
மயிலொடுபொன்மலையொருவெண்மலையின்மிசை
யிருந்ததெனமாசில்லாவோர்
கயிலைதனில்வீற்றிருந்ததனிப்பொருளையுளத்தொடு
கண்களிப்பக்கண்டு
வெயில்விடுபொன்முடிமிசையவ்விறைவனடித்துணை
மலரைவிரும்பிச்சூடி (12)

படர்திரைவாரிதிவிடமுண்டெமைப்புரந்தவாரமுதே
பன்னூலாலுந்
தொடர்வரியதனிப்பொருளேசுகநிலையேகுணமலையே
தொண்டர்யாரு
மிடரெனுமக்கடலில்விழாதெடுத்தாண்டவருட்கடலே
யென்றுநீங்கா
வடர்பவநோயினையகற்றுமருமருந்தேயெனத்துதி
செய்தறைவர்மாதோ (13)

கலிப்பா

தூயதவஞ்செய்துபுகர்தோற்றுவித்தான்பாற்றடமொன்
றாயதடத்தின்பாலருந்துவரேல்வாளவுணர்
தீயசமராற்றிச்செகுப்பாரெமைக்கருணை
நாயகவுன்றாளேசரணமெனநாமடைந்தேம் (14)

---

11. புக்கார்-என்பதன் முதனிலை விகாரபட்டு இறந்தகால முணர்த்திநின்றது புகுந்தாரென்பது பொருள்-பயம்-பால்

என்றமரர்கூறவிறையோனதுகேளாக்
குன்றனையதிண்டோளவுணர்கொடுஞ்சமரால்
வன்றுயரெய்தாமேபுரத்தும்யாம்வானவர்காள்
சென்றிடுமினும்முலகென்றெம்பெருமான்செப்பினன் (15)

எம்பெருமான்சொன்னமொழிகேட்டிதயமகிழ்ந்
தும்பர்செழும்பொன்னுடடைந்தாருவந்ததன்பின்
னம்புமிமையோர்தங்குறைமுடிப்பானங்கையமர்
செம்பவளமெய்யானினைத்தான்றிருவுளத்தில் (16)

பத்தர்பணிந்தேத்தும்பசும்பூங்களாவனத்திற்
சுத்தமுறுஞ்சோதிச்சுயம்பாமருட்குறிநின்
றுத்தமஞ்சேர்திவ்யவொருபுருடன்போலெழுந்து
புத்தமுதவாவியிடையேபுகுந்தனனல் (17)

அங்கதனிற்றோய்ந்தெழுந்தானவ்வேலையெம்பெருமான்
பங்கமிலாமேனிவிளங்கியதாற்பான்மயமாய்த்
துங்கமுறுமத்தீஞ்சுவைப்பாற்றடமதுதான்
றங்குமொருநன்னீர்த்தடமாயிருந்ததுவே (18)

தெள்ளுதிரைப்பாற்கடலின்முன்னோர்தினமதனி
லொள்ளியவெண்டிங்களுதித்தங்கெழுந்ததுபோற்
றள்ளரியமேன்மைத்தடத்தினிடைத்தான்மூழ்கி
வெள்ளைவடிவத்தோடெழுந்தான்வெளிப்படலும் (19)

கலிவிருத்தம்.

சீர்த்தவத்தால்வருசிறந்தபாற்றட
நீர்த்தடமானதுநிகரில்பாலினாற்
போர்த்தமெய்யுடனொருபுருடனிற்பதும்
பார்த்தனன்சுங்கனோர்பார்வையாலரோ (20)

நோக்கியப்புருடனைநோய்தினிங்ஙன
மாக்கினனிங்கிவனுவிசென்றிடத்

தாக்குதுமிவனையாமென் றுதன் மனத்
தூக்கினனெழுந்தனனோடினானரோ (21)

தாங்கருஞ்சினத்துடன் றன்னைத்தாக்குவா
னாங்குவந்திடுமவற்கஞ்சியோடல்போற்
றீங்கிலப்புருடனுஞ்சிரித்துவேகமா
யோங்குமக்களாவனநோக்கியோடினான் (22)

ஈடினான்மறைப்பிரானிங்ஙனோடலு
மோடினான்பின்றொடர்ந்துசனன் கண்டிலன்
றேடினானெங்கிவன்சென்றுளானென
வாடினானக்களாவனத்தினின்றரோ (23)

அக்களாவனத்திடைப்பின்னரன்னவன்
றொக்கவெண்கலைமதிநிகருஞ்சோதிகூர்
மிக்கநல்வடிவொடுவிளங்கித்தோன்றுறுந்
தக்கவோரருட்குறிதனைக்கண்டானரோ (24)

ஆசிரிய விருத்தம்.

வாய்ந்ததவத்தால்வருபாற்றடமதனி
　　லொருபுருடன்வந்துபுக்குத்
தோய்ந்தனன்பால்வடிவமுடனெழுந்து
　　களாவனம்புகுந்தான்றொடர்ந்துந்தோன்றா
தேய்ந்தவனத்திடைமறைந்தான்பானிறமு
　　ற்றருட்குறியொன்றிருந்ததிங்கே
யாய்ந்தபுனற்றடமாயிற்றத்தடங்கா
　　ரணமெவனென்றையுற்றானால் (25)

இங்கிதனைநிட்டைபுரிந்தறிதுமெனக்
　　கருதியஃதியற்றுங்காலைப்
பொங்குதிறற்புருடனெனப்போந்துபாற்றட
　　த்தினிடைப்புகுந்துவாவி

---

23. ஈடு-உவமை, உசனன்-சுக்கிரன், அரோ-அசைநிலை

தங்குபயங்கவர்ந்துகளாவனத்திடையி
வ்வருட்குறியாய்ச்சயிலப்பாவை
பங்குறுமெம்பெருமானேயிருந்தனனென்
றறிந்தனனப்பளிங்குமாதோ (26)

கலிவிருத்தம்.

இனிதங்குணர்வுற்றவணெய்தியவோர்
புனிதம்பெறுமற்புதலிங்கமதைப்
பனிதங்கியபன்மலர்கொண்டுபெருந்
தனியன்பொடுபூசனைசெய்தனனால் (27)

இயல்போடுதனிக்கவியிங்ஙனமங்
குயர்பூசையுஞற்றியபோதொருநா
ளயன்மாலறியாதவெமானவன்முன்
சுயமாவடிவத்தொடுதோன்றினனே (28)

எங்குந்திகழும்பிறைதோன்றலுமே
பொங்குந்தனியன்பொடுகண்டுமையோர்
பங்கன்பதபங்கயமாமலரைச்
சுங்கன்பரவித்துதிசெய்தனனே. (29)

துனிதீருமைச்சுருதிப்பொருளே
கனியேயமுதேகருணைக்கடலே
பனிமால்வரையீன்றபசுங்கொடிசேர்
தனிமாமுதலேசரணஞ்சரணம் (30)

கொலைவாரணமாவுரியாய்குளிர்வெண்
கலைவாண்மதிசேர்சடையாய்கனமா
மலைவார்சிலையாய்வரதாவிமையோர்
தலைவாவெனையாள்சரணஞ்சரணம் (31)

---

26. பளிங்கு-சுக்கிரன்
29. தனி யொப்பின்மை

என்றேதுதிசெய்திடவெம்பெருமா
னன்றேயுளதன்புநயந்தனமுன்
குன்றுநினைவேததுகூறுக்கீ
யின்றேவரமீகுதுமென்றனனால் (32)

சொல்வானுயர்சுங்கனருஞ்சமரில்
வல்வானவர்தம்மையவாளவுணர்
வெல்வான்வரமீயெனவேண்டலும்ம
நல்வான்மதிசேர்சடையானவில்வான் (33)

எப்போதிமையோரெமைபேகருதா
ரப்போதவர்தம்மையருஞ்சமரிற்
றப்பாதுவெல்வாருயர்தானவரென்
றெப்போதரியானுரைசெய்தனனால் (34)

அகவல் விருத்தம்.

அத்தனுரைசெயப்புகர்பின்னரும்பகர்வானென்றவத்
 தாலமைந்ததாய
வித்தடஞ்சுக்கிரதீர்த்தமென்றுநறும்பாலுடனுற்
 றிடலான்மிக்க
சுத்திகொள்பால்வாவியென்றும்புருடனெனவந்திதினீ
 தோய்ந்தவாற்றால்
வித்தகமகாபுருடதீர்த்தமென்றும்பெயர்படைத்து
 விளங்கல்வேண்டும் (35)

இன்னமுதத்தடம்படிந்துன்றிருமேனிவெண்ணிறமுற்
 றிருந்தவாற்றாற்
பன்னுதிருப்பேருனக்குப்பால்வண்ணனெனவுலகிற்
 பரவல்வேண்டு

---

33. வெல்வானென்பது-வினையெச்சம் ஈயாயென்னு முன்னிலையே வல்வினைச்சொல்-ஆய் விகுதிபுணர்ந்து குன்றி ஈயென நின்றது-கொடுவென்பது பொருள்

முன்னுலகம்பெறல்வேண்டுமித்தடத்திற்படிந்தவரென்
றுரைக்கத்தந்தே
முன்னியவிவ்வரமுனக்கென்றுளமகிழ்ந்துசொலி
மறைந்தான்முதலிறில்லான் (36)

கறையுறுவாளவுணரைப்பாதலத்திடைப்போய்ச்
சேர்மினெனக்கழறிச்சுங்க
னுறையுமிடஞ்சேர்ந்தனனன்முனிவரர்காளத்தலத்தி
னுறுநாற்பானு
மறைதருமைங்குரோசவரையுளபுனல்புண்ணியதீர்த்த
மாகுமென்னிற்
குறைதவிரச்சுக்கிரதீர்த்தப்பெருமைதனையெடுத்துக்
கூறலென்னே

பாலவண்ணர்திருநாமமுண்டான சருக்கம்
முற்றிற்று.

ஆகச் சருக்கம்-17-க்கு-விருத்தம்-524.

---

பதினெண்ருவது

## நாரதகாளாயர்பாவந்தீர்த்த சருக்கம்.

---

வீ—கலிவிருத்தம்.

காவளம்பெறுதிருக்கருவைமாநகர்த்
தேவனாரதப்பெயர்முனியைச்சீர்மிகு
தாவில்காளாயனைச்சார்ந்தவோர்பெரும்
பாவநீக்கியகதைபகருவாமரோ (1)

---

36. முன்னிய—நினைத்த—சொல்லியென்பது சொலியென நின்றது இடைக்குறை விகாரம்-தடம்-தடாகம்

37. குரோசம்-கூப்பிடுதூரம்-வரை-அளவு-ஏ-அசைநிலை

தண்ணறுந்தொடைபுனைசாத்தன்பூரணைப்
பெண்ணுடன்புட்கலைமேவும்பெற்றியான்
விண்ணின்மேற்கிளர்தருவெள்ளிவெற்பினின்
றெண்ணுதெக்கணதிசைநோக்கியேயரோ (2)

இலகுவெண்கரியின்மேலேறிச்சேனையுந்
தலைவன்காளாயனுஞ்சார்ந்துபோந்திடக்
குலவியேசெல்லுமப்போதுகோதிலா
நலமுறுநாரதமுனிவனண்ணினன் (3)

அரிகரபுத்திரனங்கைநீட்டியே
பரிவுடனாசிதான்பண்ணலும்மிக
வெரியெழநோக்கியேயெம்முனீயொரு
பெரியவன்போற்கரநீட்டிப்பேசினுய் (4)

கஞ்சன்மாமகனெனக்கண்டுசெற்றுநீ
யஞ்சினுயிலைமனத்தகந்தையுற்றுளாய்
கொஞ்சமேகூறினுய்கூறுவனஞ்
சஞ்சரித்திருவெனச்சாபமிட்டனன் (5)

ஞானமாமுனிவரனவின்றகாலையிற்
சேனைகாவலன்மிகுசிற்றத்தோடுநீ
தானுரைசெய்யுமிச்சாபநன்றுவெங்
கானகவாழ்வில்யாங்கருத்துளேமென (6)

வித்தகமுனிவனைவெகுண்டுகுண்டுணிப்
பித்தநீகலகத்திற்பிரியனாகியே
பெத்தலத்தினுமுனையிகழ்ந்துகூறவென்
றுய்த்தவன்கதையினாலுந்திவீசினன் (7)

---

3. வெண்கரி-வெள்ளையானை
4. எரி அக்கினி-கஞ்சன்-பிரமன் ஆசி-ஆசீர்வாதம்
7. கதை-தண்டு-கூற வென்பதனிறுதியகரம் வியங்கோட் பொருளுணர்த்தி நின்றது

ஏவியகதையின்வேகத்தினுலெழுந்
தாவெனவப்யமென்றலறிவாய்வெரீஇ
மூவிழிக்கடவுண்முன்முறையிட்டோதிட
மேவினன்கயிலையில்விதியின்கொட்பினல் (8)

அண்ணறன்றிருமுனமடைந்துநாரதன்
கண்ணினீர்மல்கமெய்கலங்கியெம்பிரான்
றண்ணுறுந்தாமரைத்தாளில்வீழ்தலு
முண்ணெகிழ்ந்தென்கொலென்றேதவோதினுன் (9)

இருநிலநீங்கியானிறைவநின்பதத்
தெரிசனைக்கெழுந்திவண்சேருங்காலையில்
விரிகடற்பெரும்படையோடுமேவியே
வருகின்ருன்கடனிறவையனவ்வயின் (10)

நானுபசாரநன்மொழிநவிற்றலுந்
தானுரைத்திலனென்றுதானைகாவல
னேனெனையஞ்சலிசெய்திடாததென்
றானமில்கதையினுலுயரவீசினுன் (11)

வன்றிறலுடையகாளாயன்வன்பினுற்
கொன்றிடக்கருதியேகொடியதண்டினு
லின்றெறிதலும்புகலின்றியெந்தையே
யுன்றிருவுளத்தினுலுய்ந்துபோந்தனன் (12)

என்னலுமிறையவன்வெகுளியெய்தியே
நன்னெறிநந்திபைநோக்கிநம்வயி
னன்னகாளாயனையழையென்றேதலு
மின்னதீர்நந்தியும்விரைவினெய்தியே (13)

வம்பினையுடையகாளாயவாவுனை
யெம்பிரானழைத்தனனெனவியம்பலுங்

9. மல்க-நிறைய
10i வயின் இடம்

கம்பிதத்தொடுமவன்கடிதினெய்தவே
தம்பிரான்செயலென்னேவென்றுசாத்தனும் (14)

ஏகினன்கயிலையிலிறைவனணையாற்
சேகுறுமனத்தன்காளாயன்சென்றுதா
னாகுலத்தொடுமலரடியில்வீழ்தலும்
வேகியாயவன்றனைவிமலனோக்கியே (15)

விஞ்சைமாமுனிவரன்விரும்பியுன்னையே
யஞ்சலிசெய்திலனென்றவன்றனை
யுஞ்சிடாவண்ணமேயுன்கைத்தண்டினு
லெஞ்சலுற்றிடவெடுத்தெறிந்ததென்னென்றான் (16)

அக்கணந்தன்னிற்காளாயன்போற்றியே
தெக்கணநோக்கியாஞ்செல்லுங்காலையின்
முக்கணயகவிந்தமுனிவன்போந்தனன்
றக்கதென்றெம்மன்கைதன்னைநீட்டியே (17)

ஆசிகூறினனவனறைந்தகாலையின்
மாசறுதவனெனைவணங்கிடாமலே
பேசினுய்காந்தனைநீட்டிப்பேதைநீ
வாசமுற்றிடுகநீவனத்திலென்றுதான் (18)

சாபமொன்றிசைத்தனன்றமியனேற்கென்னே
கோபம்வந்தெறிந்தனன்குற்றமாமெனிற்
றூபரமில்லைநின்சலத்துக்காற்றலே
னீபமென்றடிதொழுதுநின்றனன் (19)

அஞ்சலிசெய்திலனென்றகந்தைசேர்
நெஞ்சுடைமூடனம்மிடத்தினீகொடு

---

14. கம்பிதம்-நடுக்கம்.
17. எம்மன்-எமது அரசன்
19. சலம்-கோபம்

வஞ்சனையுற்றபொய்வார்த்தைபேசலால்
விஞ்சியபாதகமேவினையன்றே (20)

இப்பவந்தீர்வதற்கியம்புவோமுனக்
கொப்பறுமநாதிமாபுரத்திலொன்றிநீ
யப்பதிதனிலெமையருச்சிப்பாயெனி
லெப்பவங்களுமறுமெய்துகென்றனன் (21)

நாதனுமருள்செயநாரதன்பணிந்
தோதுபற்பலதுதியுஞற்றித்தன்னுடை
யேதமதகற்றுவானெழுந்துவேலைசூழ்
பூதலத்துபயமாபுரத்திற்போந்தனன் (22)

இன்றவனேகவெம்மிறைவன்பக்கலி
னின்றகாளாயனைநீயக்காரிசொல்
லின்றியேகதையெறிந்திடுகடும்பிழை
யின்றறவுபயமாபுரத்திலெய்தியே (23)

ஆங்குநீசென்றெமையருச்சிப்பாயெனிற்
றீங்குறுபாதகந்தீருமென்றலு
மோங்குசெண்டாயுதக்கடவுளோடுமே
பாங்குடனவனுமப்பதியிற்போந்தனன் (24)

துங்கநாரதனெனுமுனிவன்றூயதோர்
கெங்கையாகியபெருங்கிருபைமாநதிப்
பொங்குதண்புனலிடைமூழ்கிப்புண்ணியன்
பங்கயப்பதத்தினைப்பரிந்துபூசித்தான் (25)

பரிவினோராண்டவன்பரவிப்பூசனை
புரிதரமழுவலான்பொலிந்துதோன்றியே
யுரியநம்பூசனையுஞற்றலாலுனை
விரவியபாதகம்வீட்டினேமின்றே (26)

---

22. ஏதம-குற்றம்
23. காரி-ஐயன்.
26. பரிவு-அன்பு-உஞற்றல்-செய்தல்-வீட்டினேம்-ஒழித்தோம்.

இப்பதியடைதலேசரியையிங்கதி
யப்பிடையாடுதல்கிரியையன்பினு
லொப்பறுபூசனையுஞற்றல்யோகமாஞ்
செப்புநம்முருத்தெரிசித்தன்ஞானமே (27)

என்றுரைத்திறையவனிகலினேடுனக்
கன்றுகாளாயனங்களித்தசாபமு
மின்றுலகினுக்கனுக்கிரகமாமென
வொன்றினனிலிங்கத்துளுயர்ந்தமாதவன் (28)

அரனடிவணங்கியாண்டையன்றன்னெடு
விரவியநன்மொழிவிளம்பிவேலைசூழ்
தரையினின்றளவிலாத்தகைலமைசானுமிந்
திரனுலகத்தினிற்சென்றுமேயினன் (29)

கண்ணுதறன்னைக்காளாயன்றானுவர்
தெண்ணறுபூசனையிபற்றவெந்தைபால்
வண்ணநாயகன்வெளிவந்துன்பான்மிக
நண்ணியபாதகமொழிக்கநண்ணினேம் (30)

என்னவுமருள்புரிந்திகலினேடெதி
ரொன்னலருயிரெலாமுண்ணுந்தண்டமொன்
றன்னகாளாயனுக்களிக்கப்பெற்றவன்
மன்னியகடனிறவையன்பால்வந்தான் (31)

அறுசீர் விருத்தம்.

வந்தகாளாயனந்தவனாதிபுரமகிமையெலாம்
வழுத்தக்கேளாச்
சிந்தைமகிழ்ந்தையன்விசித்திரவிரதமிவர்ந்துவந்தச்
சிவலிங்கத்தைக்
கந்தமலர்கொடுபூசித்திருந்தனனவ்வேல்வையிற்பூங்
களவின்மேவு
மெந்தையுளமுவந்தவன்முன்றேன்றினன்மால்விடை
யின்மிசையிறைவியோடும் (32)

தோன்றியவெம்மையனையன்றனைநோக்கிச்சித்திரத்
 தேர்தூண்டிநீவந்
தான்றநமைப்பூசனைசெய்தமையாற்சித்திரவிரத
 வையனென்று
தான்றிருப்பேர்பெற்றிருப்பாயடியவர்க்குவேண்டும்
 வரந்தந்தென்றேதி
மான்றிகழ்செங்கரதலத்தவ்வள்ளன்மலைமடந்தை
 யொடுமறைந்தானன்றே (33)

கலிவிருத்தம்.

ஞானமாதவர்காண்முனைநம்பெரு
மானுவந்துவழுத்தியவாறுளான்
கானுறுந்தல்களாவிலிங்கத்தினீ
சானதிக்கிலச்சாத்தன்மகிழ்ந்தரோ (34)

நாரதகாளாயர் பாவந்தீர்த்த சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் 18க்கு விருத்தம் 558.

---

பன்னிரண்டாவது

## யமவாதை யொழித்த சருக்கம்—தி.

கலிவிருத்தம்.

சூதைநேர்முலைத்தோகைபங்காளனெந்
தாதைபால்வணன்றன்றலத்தேயம
வாதைதானணுகாதுசெய்மாதிருக்
காதைதன்னைச்சிறிதுகழறுவாம் (1)

அகவல் விருத்தம்

கந்தமுறுநறுமலர்ப்பூங்களாவனந்தென்கயிலையெனக்
 கருத்துட்கொண்டு
வந்துறையுந்திருக்கருணைவள்ளலெனத்திகழ்சிவபால்
 வண்ணனெம்மா

னந்தணர்வானவரெவருமறிவரியவேதமுட
னமுதபிந்து
விந்துபிரணவமெனுமோர்நான்கும்வரவழைத்தினிது
விளம்புவானுல் (2)

கலிப்பா.

கஞ்சமலர்த்தடம்புடைசூழ்கருவைவளம்பதியதனிற்
பஞ்சகுரோசத்தினுக்குளுற்றிடுநற்பலவுயிர்க்கு
மிஞ்சியமவாதையினியணுகாமேவெற்புருவா
யெஞ்சலினுற்றிசையினுநின்றினிதுபுரந்திடுமினென்றான் ()

திங்களணிசடைப்பெருமான்செப்பியசொற்கேட்டுவந்து
தங்கினதவ்வமுதபிந்துசயிலமெனக்கீழ்திசையிற்
பொங்குகடலுலகமெலாம்புகழ்தருநற்பிரணவமுத்
துங்கமுடனின்றதுசீர்துலங்கியதெக்கணதிசையில் (4)

மெச்சுபெருந்தகைமையுறும்விந்துவுநின்றதுவாலப்
பச்சிமதிக்கினில்வேதம்பகர்தருமுத்தரதிசையி
லிச்சையொடுநின்றதுதன்னிணையடித்தாமரைபணிவோ
ரச்சமொழித்திடுமிறையோனருளியசொற்படிமாதோ (5)

மூத்தசுதனெனுங்கயமாமுகன்வடிவேற்குகனுயர்மா
சாத்தன்வயிரவனென்னச்சாற்றுமொருநால்வரையு
மேத்துமிமையவர்தமக்காவிரங்கிவிடதுகர்ந்தவரைக்
காத்ததிருக்களாவுடையான்றிருவுளத்திற்கருதினனல். (6)

எந்தைதிருவுளமதனினினைத்தலுமேயினிதுணர்ந்து
வந்தனர்நால்வருமிறைதாள்வணங்கினரெப்பெருமான்
சிந்தைதனிலின்றுநமைநினைத்திடநாஞ்செய்தவென்னே
முந்துதவமெனவுவகைப்பெருங்கடலுண்மூழ்கினரால் (7)

---

4. உத்துங்கம்-உயர்ச்சி

5. பச்சிமம்-மேற்கு உத்தரம்-வடக்கு

அவர்தமையெம்மிறைநோக்கியறைகுவன்யாம்வீற்றிருக்கும்
பவமறுமித்தலமதனிற்பஞ்சகுரோசத்தினுக்கு
ளுவகையொடுமருவுமெல்லாவுயிர்க்கும்யமவாதையொடு
நுவலரியபெருங்கொடியநோயுமணுகாமலரோ (8)

நாற்றிசையினூற்றிடுமவ்வமுதபிந்துநகமுதலாச்
சாற்றியவோர்நால்வரையின்றடஞ்சிகரத்திடையிருந்து
போற்றிடுமினவண்விரைந்துபோமினெனப்புகன்றனனுற்
றேற்றமுடனிறுதியெனச்சொலுமிரண்டுமில்லாதான் (9)

பூரணைபுட்கலையென்னும்பூங்கொடிகளுடன்வெள்ளை
வாரணமீதிவர்ந்துசுடர்வபங்குபெரும்பலபடைகள்
சீரணியுங்கரத்தேந்தித்திகழமுதகிரியதனிற்
றூரணியாவையும்பரவச்சாத்தனமர்ந்தனன்மாதோ (10)

அன்றுமதகயவதனத்தவுணனையவ்வருஞ்சமரில்
வென்றுசுரர்தமைப்புரந்தவேழமுகத்தெம்பெருமான்
றுன்றுபலபடைகளுடன்றுலங்குமூடிகத்தேறிச்
சென்றுபிரணவமலையின்சிகரமதிலிருந்தனனுல் (11)

தனதுதிருக்கரதலத்திற்றரியலர்கண்டுளம்வெருவுஞ்
சினமுறுமுத்தலைவேலுந்திரமுறுந்தண்டமுந்தாங்கிக்
கனமுடுவற்படைசூழக்கருங்புரவிமிசையேறி
மனமகிழ்வுற்றெய்திவிந்துமலையில்வயிரவனிருந்தான். (12)

எற்றுதிரைக்கருங்கடன்மேலெழுந்தவிளங்கதிரவன்போல்
வெற்றிவடிவேற்படைதன்விளங்குதிருக்கரத்தேந்தி
நற்றனிமாமயிலேறிநண்ணியநான்முகப்பெருமான்
குற்றமிலற்புதவேதக்குன்றிடைவீற்றிருந்தனனுல் (13)

ஆகச் சருக்கம் 19-க்கு விருத்தம் 571.

யமவாதை யொழித்த சருக்கம் முற்றிற்று.

---

9. நகம்-மலை வரை-மலை 10. படை-ஆயுதம் 11. மூடிகம்-பெருச்சாளி 12. முவெல்-நாய் கரும்புரவி-கருங்குதிரை

பதிமூன்றுவது
## தக்கன் வேள்விச்சருக்கம்—வீ.

அறுசீர் விருத்தம்.

புரமொருமூன்றும்வேவப்புன்னகைபுரிந்தமுக்கட்
பரமனேயமரர்யார்க்கும்பரம்பொருளெனவுன்னுமே
வரமுறுதக்கன்செய்தமகந்தனைக்காண்பான்சென்ற
பிரமன்மான்முதலோர்சாபம்பெற்றதோர்சரிதஞ்சொல்வாம்

எழுசீர் விருத்தம்.

பண்டொருகாலமயன்றருபுதல்வர்பதின்மரிற்
றலைமகவாய
திண்டிறலுடையதக்கனென்றொருவன்றீமையாற்
செகமெலாந்தன்கைக்
கொண்டிடவேண்டுங்குறிப்புடையவனுய்க்குளிர்
மதியிரவிவெங்கனலாங்
கண்டலமுடையகடவுளைநோக்கிப்புரிந்தனன்றவ
நெடுங்காலம் (2)

அக்கணிசடிலக்கறைமிடற்றண்ணலப்பொழு
தருந்தவம்புரியுந்
தக்கன்முன்றோன்றிவேண்டியதென்கொல்சாற்று
கென்றலுமவன்சாற்றுஞ்
செக்கர்மேனியநின்றேவியாமுமையென்செல்வியாய்
வந்திடவுனது
மிக்கநற்கருணைபுரிந்திடவேண்டுமென்றலு
மருளினன்விமலன் (3)

ஆங்குநல்வரந்தான்பெற்றபினிமயாசலமரு
ளுமைதனைநோக்கி
யோங்குறுதவஞ்செய்தனன்செயும்பொழுதெவ்
வுலகமுமீன்றவெம்மிறைவி

பாங்குறுமகரத்தடத்தில்வெள்வளைமேலொரு
பசுங்குழவியாயுதித்தா
டங்கறுதக்கனிருவிழிகளிக்கக்கண்டுதன்செங்
கையாலெடுத்தான் (4)

முதிரொளிவளையிலுதித்தவோராணிமுத்தெனக்
கண்டினிதெடுத்த
புதியவோர்மகவைத்தன்றிருமனையாள்பூங்கரத்
திடைக்கொடுத்திடலு
மதிநிகர்வதனத்தெரிவைதன்கரத்தால்வாங்கினள்
வடமணிந்திலங்கும்
கதிர்முலையமுதஞ்சுரந்ததுநெஞ்சமுவகையங்கட
லுளாழ்ந்ததுவே (5)

ஓகையினுடனந்தணர்தமைக்கூவியுதித்தநாட்
சாதகம்வருத்தி
யாகமவழிநல்வித்துகளுதவியருநிதிக்குப்பைக
ளளித்துப்
பாகுறுமிசைவாணருக்கமுதூட்டிப்பல்பணியாவை
யும்வழங்கிச்
சோகமின்மறையுங்காணுமையிலைத்தொட்டின்
மேல்வைத்தினிதாட்டி (6)

நாளொருவேழிற்காப்பிணையணிந்துநகைமணி
யரைவடஞ்சாத்தித்
தாளிடைச்சதங்கைபரிபுரமணிந்துதரளமாமணி
முதன்மணியின்
கேழ்கிளர்கோவைவடம்பலதரித்துக்கிளர்மணிச்
சுடிகையும்வனைந்து
வாள்விழிகளிலஞ்சனமணிந்தன்பினெடுவளர்த்திட
வளர்ந்தனளால் (7)

---

5. மதிநிகர்வதனம் - என்றமையால் பொதுத்தன்மைத் தொகையு-வமையணிகதிர்-ஒளி
7. கேழ்-நிறம் சுடிகை-சுட்டி

தரையிடைத்தவழ்ந்தாண்டொன் றுசென்றதன்
பின்றக்காற்சடங்குகண்முடித்து
வரவரவயதோரிரண்டுமூன்றுமெனமதிவளர்வதுவென
மங்கைப்
பருவம்வந்தெய்தியழகினுற்றிகழ்ந்துபன்னிரண்
டாண்டுசென்றதன்பின்
விரவியசுற்றத்தவரொடுந்தக்கன்வினவிவீற்றிருக்
கும்போதோருநாள் (8)

இறைவியென்புதல்வியாகையாலிவளையின்றியே
யைந்தொழிலனைத்துங்
கறைமிடற்றிறைவன்புரிவதெங்ஙனநங்கன்னியை
யவனுக்கீயாமன்
மறையவனொருவன்றனக்களித்தெமதுமனையில்
வைத்துலகினுக்கிறைமை
பெறுதுமைந்தொழினடத்துதும்யாமேயென்றுதா
ன்பெருஞ்செருக்கடைந்து (9)

இருந்தனன்சிவனையிகழ்ந்தவனிவ்வாறிருந்ததற்
கேதுவென்னெனிலோ
வருந்தவமுடையமுனிவர்காள்கேண்மினவனியி
லொருவனுக்கந்தோ
வருந்துறுகேடுவரும்பொழுதவற்குமதிகெடுமாத
லான்மடமை
பொருந்தியெப்பிழையும் பெறுவதற்குரியனுயினு
னயன்றருபுதல்வன் (10)

விதிமுறைவழுவாவதுவைநாட்குறித்துமெய்ப்பு
துமறையவர்களிலோர்
முதியனைத்தேடியவன்வெளிவாளுமுக்கணையக
னஃதுணர்ந்து

மதிதவழ்சடையுமறிமழுக்காமுமறைத்தொருமு
    தியவனுகி
யெதிர்வரக்கண்டுதக்கனுங்கெய்திமனமியைந்தொ
    ருமொழியியம்பும் (11)

நான்மறைமுதியோயுனக்கருமறையினுள்ளுறு
    நற்பொருள்வருமேல்
யானுணர்ந்திடநீயுரையெனவிறைவன்யாவருமறி
    யொணுப்பொருளைத்
தானுரைத்திடலுந்தக்கனுமகிழ்ந்துதகுமெனக்
    கொண்டுவந்தெழில்கூர்
வேனிகர்விழியாடனையருமறையின்விதிமுறை
    மணம்புணர்வித்தான் (12)

தக்கன்றன்மனைவியானவள்சலித்துத்தனக்குநே
    ரில்லவடனையே
யிக்கிழவனுக்கோகொடுத்தனனென்றேயிருந்து
    யர்க்கடலினுளாழ்ந்தா
ளொக்கலும்பரிவுற்றிரங்கினரதனையுணர்ந்திறைய
    வன்றனதுருவை
யக்கணந்தோற்றிமறைத்துமையவளோடகன்ற
    னன்மழவிடையதன்மேல் (13)

இச்செயலறிந்ததக்கனென்புதல்விதன்னையேவேற்
    றுருவெடுத்தே
யச்சிவன்கொண்டேகினதழகம்மாவென்றுதன்னக
    மிகக்கோதித்து

---

11-வதுவை - கல்யாணம் - இயம்பும் - சொல்வான் - பல்லோர்
படர்க்கைமுன்னிலைதன்-மையிற்-செல்லாதாகுஞ்செய்யு
மென்-முற்றே - என்னும் விதியால்-உயர்திணையாண்பா
லொருமைப்படர்க்கையில் வந்தது

நச்சராவெனத்தன்றனேயோடெழுந்துநணுகியே
யென்னுடன்பகர்ந்த
பொச்சமாமறையோய்போகனீநில்லென்றடர்ந்தரு
மேறெனப்பொருதான் (14)

ஒல்லையிலமலன்வெகுண்டடர்ந்தெழுந்தேயுலப்பருந்
தானையைமடித்துப்
புல்லறிவுடையதக்கனைத்தாளாற்புடைத்தலுந்
தீமொழிபுகன்றே
செல்லலுற்றனன்றன்பதிதனிலந்தத்தீமையோன்
சேவினையுகைத்துத்
தொல்லையாம்வெள்ளிவெற்பினையடைந்தான்றோற்றமு
மீறுமில்லவனே (15)

எண்ணறுங்காலங்கழிந்தபின்விரிஞ்சனிமையவர்
முனிவர்தம்மோடு
மண்ணறன்கயிலையடைந்தனனந்தியமலன்பால
டைந்தருட்கடலே
விண்ணவரோடுமயனிவண்போந்தானென்றலும்
விடுகெனவிறையோ
னுண்ணெகிழ்ந்தருளோடுரைத்தலும்பிரமன்சென்
றடிபணிந்துரைசெய்வான் (16)

அருட்பெருங்கடலேயடியனேனரியயாகமொன்றிய
ற்றிடக்கருதி
விருப்புடன்றிருமுன்னடைந்தனனவியாங்குவந்
திடவேள்வியினீயுந்
திருக்கருணையினாலெழுந்தருளென்றன்செல்வமே
யெனவுரைத்திடலு
மருப்பொதிதுடுக்கைச்சடிலனந்தியையாங்கேகென
வழுத்தினன்மாதோ (17)

---

15 சே-எருது-உகைத்து-டேத்தி-தொல்லை-பழமை-ஈறு-முடிவு.
16, விரிஞ்சன்-பிரமன்-போந்தான்-வந்தான். 17-திரு-சன்னிதி.

அப்பொழுதயனுநந்தியோடிமையோருமறைமுனி
வர்சூழச்
செப்பருங்கயிலேதன்னைவிட்டகன்றுசென்றுதம்
மூலகிடைப்போந்தாங்
கொப்பருவேள்வியியற்றுதற்கியைந்ததுணர்ந்தனன்
றக்கனுமொழிய
வெப்பமோடெழுந்துதந்தைபாற்குறுகிவெகுண்
டொருமொழிபகர்ந்தனனல் (18)

சுடலையாடரங்காயென்பணியாய்த்தோலாடையாயூர்
தொறும்பலிகொண்
டிடுவதேதொழிலாய்க்கொண்டவன்றனையோரிறை
யெனவேள்விநீபுரித
லடைவதன்றவனுக்கவியுதவிடிலவ்வேள்வியும்பழு
தெனவெகுள
மடலவிழ்கமலத்தவிசுறைபுத்தேண்மனமயர்ந்தஃ
தொழித்தனனல் (19)

தீதுறுமொழியாற்றக்கனங்குரைத்தசிறுமையை
நந்தியுங்கேட்டுப்
பாதகாசிவனையன்றியேயாகம்பண்ணவுமுடியுமோ
வவிதா
னுதனுக்குதவாவேள்வியுமுளதோவதிற்பலனல்
குவதெவனே
யாதுநீயிறைவன்றனையிகழ்ந்துரைத்ததுன்றலையின்
றரிந்திடுவேன் (20)

பங்கயத்தொருவன்புதல்வனுதலினுற்பொறுத்தன
னென்னவேபகர்ந்து
மங்குறேய்வெள்ளிவரைதனினந்தியடைந்தனன்
மகத்தினுக்கடைந்த

19. அன்று-எதிர்மறைக்குறிப்புவினைமுற்று-புத்தேள்-தெய்வம்.

வெங்கணுமுள்மாமுனிவசரிமையோரரக்கர்கின்ன
ரர்புவியளந்த
செங்கண்மான்முதலோர்யாவருந்தந்தமுறைவிடஞ்
சென்றடைந்தனரால் (21)

க்லிவிருத்தம்.

நன்னெறியிறக்கனொருஞான்றுமனதிற்ற
னுன்னினன்முடிப்பரியதாயசெய்லொன்றைப்
பொன்னுலகினுக்கிறைவன்பொன்மகண்மணாளன்
றன்னொடயன்வானவரைத்தான்வரவழைத்தான் (22)

ஆண்டவரடைந்திடலுமாங்கினிதடைந்த
வேண்டுமிமையோர்தமைவிருப்பினொடுநோக்கிக்
காண்டருமகந்திசெலக்கண்டுபயமுற்றோ
வீண்டுபெருவேள்விபுரியாதிவணிருந்தீர் (23)

ஈசனுலகுக்கிறைவனென்றுநினைவுற்றுப்
பேசுவது தானுமதுபேதைமையதாமாற்
காசினியின்மீதுநனிகண்டவர்கள்யாரு
மேசிடவுழன்றுபலியேற்றுமுணுகர்ந்தான் (24)

ஓர்ந்திடுமினீர்சுடலையுற்றுணர்வனைத்தும்
பேர்ந்துநடமாடுமொருபித்தனவனன்றோ
வார்ந்தபுகழ்மேன்மையுளநாமனைவருந்தாஞ்
சேர்ந்திடிலவன்றனதுசெய்கையெவனாமால் (25)

என்றவனரன்றனையிகழ்ந்துபலகூற
வென்றிபெறுமாயன்முதல்விண்ணவர்கள்யாரு
நன்றெனவியைந்துளநயந்தவணிருந்தார்
வன்றுயர்வரும்பொழுதுமாறுமதியன்றோ (26)

இப்படிமயக்கியிமையோரைமுனிவோரை
யொப்பரியவேள்விசெய்வதற்குமனதன்னி

25-எவன்-என்ன-ஆம்-ஆகும்

யப்பிரமன்மைந்தனுயரண்டமுகடெட்டச்
செப்புமகசாலைகள்சிருட்டிசெயலுற்ருன் (27)

வேதிகைகுண்டங்கள்பலவேண்டுவவமைத்துக்
கோதில்பொருள்பற்பலகொணர்ந்துதரவேதா
ஆதரவுடன்புரியுமந்தமகமேன்மை
யீதளவதாமெனவெடுத்துரைக்கலாமோ (28)

ஈசன்மனதிற்சினமெழுந்தபொழுதிந்தக்
கேசவனும்வேதனும்விளுதல்செய்கின்ற
வாசவனும்வானவருமறறையபருமந்தோ
வீசொளிவிளக்கில்விழும்விட்டிலெனவெண்ணுன் (29)

இந்திரன்முதற்சுரர்கண்மாலயனிவர்க்கு
வெந்தவவியன்பினுடனேயுதவவேண்டிக்
கந்தமலரோன்புதல்வனுங்கடிதினெய்தி
வந்தனனமைத்தமகசாலையுண்மகிழ்ந்தே (30)

முக்கணனையன்றியயன்மான்முதலினோராற்
றக்கனுயர்வேள்விபுரிதன்மைதனையாங்குத்
தொக்கதவமேவியததீசிமுனிசூழ்ந்த
யக்கணமத்தக்கனையடைந்துரையலுற்ருன் (31)

தொன்மையுலகுக்கிறைவனுனபரஞ்சோதி
யின்மையிவ்வேள்விதனைறைவேறுவதெவ்வண்ண
முன்மனதின்மாலயன்விஞேர்களுளராக
நன்மைபெறும்வேள்வியெனவேமிகநயந்தாய் (32)

எண்ணரியவேகமொடெழுந்திடுவிடத்தால்
விண்ணவரிமான்முதலினேர்வெருவியோட
வுண்ணெகிழவேகருணையுற்றவிடந்தன்னை
யண்ணல்களந்தன்னிலுமணிந்ததறியாயோ (33)

---

28-ஒ-எதிர்மறையிடைச்சொல்.
30-அவி-தேவருணவு.

பண்டிறைவனுண்டவிடம்பற்றிவரும்போழ்தி
லண்டர்முதலோரபயமென்றிடுமநாளின்
மண்டுதழலின்புகைவயங்கியதனாலிவ்
விண்டுவுருவங்கறுத்துவிட்டதறியாயோ (34)

ஒப்பிலுமையாண்மருவுமீசன்முனமோர்நாட்
கைப்புறுமகன்றையதுசெய்திடுதல்கண்டு
செப்புறுதனேருகிரினாற்சிதையவேயுன்
னப்பனையுமோர்தலையரிந்ததுணராயோ (35)

பாகனமொழிக்கவுரிபாகனையலாதுன்
யாகநிறைவேற்றுபவர்யாரெனநினைத்தாய்
மாகொடியவாவயனிமால்பிறவியாய
சாகரமுளோர்களெனுந்தன்மையறியாயோ (36)

ஏனமனமாயுருவெடுத்தயனுமாலுந்
தானுணர்வதற்கரியதற்பரனுநீசெய்
யீனமகமாயவுமுனிந்திடுமவ்வேல்லை
வானவர்முனிற்பரெனவேமனதிலெண்ணேல் (37)

என்றுமொழியம்முனியியம்பியடதக்கா
வுன்னுடையவேள்வியுடனுன்னுயிருமின்னே
சின்னமுறுமாலிஃதுதிண்ணமெனவேதா
னுன்னரியசாபமதுநல்கியகல்வுற்றான் (38)

இந்தவகையாகமதியற்றுசெயறன்னை
நந்தியுணர்ந்தேகருணைநாதனிடநண்ணி
யந்தமிலவாகொடியதக்கனறிவில்லான்
வெந்தவவிதேவர்பெறவேள்விபுரிகின்றான் (39)

---

35-கைப்பு-வெறுப்பு-36-அன்ன-உவமவுருபிடைச்சொல் அன்ன வென நின்றது செய்யுள் விகாரம் இ-சுட்டிடைச்சொல்.

37-எல்லை-காலம்-எண்ணேல்-என்பதில்- எல்-எதிர்மறைவியங்கோள்விகுதி-நினையாதே யென்பது பொருள் 39 அந்தம்-முடிவு

என்றபொழுதேயுமையைநோக்கியிறைகூற
முன்றனதுதாதையிமையோரவியுவப்ப
வென்றிபெறுவேள்விபுரிகின்றனன்விரைந்தே
யின்றவனையாருயிர்முடிப்பதியல்பென்றான் (40)

அத்தகைமைகண்டவுமையாண்மனநடுங்கி
வித்தகன்மலர்ப்பதம்விழுந்தினிதிறைஞ்சி
மெய்த்தகவிலாதவனிடத்தில்விரைவிற்போய்ப்
புத்திவருமாறுபுகன்றேவருவனென்றாள் (41)

ஏதமுறுதக்கனவனெத்தனைசொனாலும்
போதமுறுநீயுரைசெய்புத்தியுணரானென்
றோதவுலகின்றவளுமோர்பிழைபொறுத்தி
நாதவெனநேயமுடனேநவிலலுற்றாள் (42)

அன்னமொழிகேட்டிறையவன்னருளினோடு
புன்னகைபுரிந்தினிதுபோவெனவுரைத்தான்
பொன்னொளிவிமானமிசைப்பொற்புறவெழுந்தாண்
மின்னிடையரம்பையர்கள்வெண்கவரிவீச (43)

துன்றுபலவாத்தியமுழங்கவளிசூழ
மன்றல்கமழ்புட்பமழைவானவர்கடேற்றச்
சென்றனள்விரைந்தினியசிந்தையருளோடூர்
தன்றனுகினடனதுதாதையருகம்மா (44)

உன்னியுலகுக்கிறைவியென்றுமனமோரா
னன்னவடனக்குமகவாகுமெனவெண்ணித்
தன்னடிபணிந்திலளெனத்தறுகணாளன்
முன்னமவணிற்பமுனிந்தானுமைமொழிந்தாள் (45)

முந்தவொருவற்கெனையளித்திடமுயன்றாய்
நந்தியையிகழ்ந்துமகநன்குபுரியென்றாய்
தந்தியுரியோர்க்கவிதராமலிமையோரா
விந்தமகநீபுரியவிப்பொழுதியைந்தாய் (46)

46-நந்தி-சிவன்.

இக்குறைகண்மூன்றையும்பொறுத்தனனெனுலே
முக்கணனையன்றியுயர்வேள்விமுடியாதா
லக்கடுவரும்பொழுதங்கங்கறுத்தமாலோ
மிக்கபெருவேள்விநிறைவேற்றிடுவன்வெய்யோய் (47)

உத்தமமறைக்கிழவனுந்தைதலையொன்று
வித்தகனநாளரிந்துவிட்டதுணராயோ
வெத்திறமகத்தினையியற்றிடுவையந்தோ
பித்தனைநிகர்த்தனைபிழைக்குரியனுனய் (48)

வேதனுடன்மாலுமறிவின்மையினின்மேனுட்
பாதமுடிகாணவனம்பன்றியுருவாகி
யோதரியகாலநனிதேடியுணர்ந்தாரோ
வாதலினிரேனுர்பெரியராகுவர்கொலம்மா (49)

நத்தணிகரத்தவனுநான்முகனுமுன்னஞ்
சித்தமயர்வுற்றுநனிதேடியறியாதோ
னத்தனெனிவிக்கிரன்முனுனவிமையோர்தா
மெத்தகையராவர்சிறிதீசன்முனிவுற்றால் (50)

கைதவமனத்தையுடையாய்கழறக்கேண்மோ
வையகமெலாம்விளக்கும்வண்மையுடையோனும்
வெய்யவனெளிக்கெரிவிளக்கொளியொப்பாகின்
மையிலிறையோற்குநெடுமாயனிணையாவான் (51)

அந்தமுதலென்பனவகன்றவிறையோனை
நிந்தனைபுரிந்தகொடுநெஞ்சமுறுபேதாய்
விந்தைபெறுசூரியனைமின்மினிநிகர்த்தா
லுந்தையுமெனுயகனையொத்திடுவன்மாதோ. (52)

வெய்யமதியோயுனதுவேள்வியும்வந்தோரு
மையமுறுநீயுமினியழிகவெனவேதான்
றையலுமையாள்சபிக்கத்தக்கன்வெகுளுற்றுப்

50- அத்தன்-சிவன்-51 கைதவம்.வஞ்சகம்.

பையரவுசீறியதெனப்பகாலுற்ருன். (53)

பேயுறவதானபுறங்காடிருக்கைபேணி
யாயசுடலைப்பொடியணிந்தரையின்மீது
தூயகலையாய்ப்புலியின்றேலினையுடுத்தே
யேயுமுபர்பூணென வெலும்பினையணிந்தே (54)

ஊர்கடொறுமையமிரந்துண்டுதிரிவோனை
யார்பணிகுவார்களிவனுல்வருவதென்னே
யேருலவுநாமெனடியவீரெழுபுவிக்கு
மோரிறைவனென்பதையுணர்ந்திலகொலின்னும் (55)

வீசுபுகழேமலியமேவியவென்வாழ்வு
நாசமுறுமென்பதொருநாளுமிலைநீதா
னீசனவனலெனதுவேள்வியிறுமென்றே
பேசியதுநின்னுடையபேதைமையதாமால் (56)

மாசுறுவெயோனிவைவழுத்தவுமையாடா
னீசமுறையாலிறைமைநிந்தனைசெய்கின்ருய்
காசினியிலெண்ணரியகற்பமுடிந்தாலு
மீசனையிகழ்ந்தபிழையென்றுமொழியாதால். (57)

உன்மகளெனச்செகமுரைத்திடவெடுத்த
வென்னுடலைவைத்திடுகிலேனினியெனத்தான்
சின்னமுறவேசிதறினுளரிந்துசிந்து
மின்னவயவங்கள்பலமெய்ப்பதிகளான. (58)

தேனனமொழிக்கவுரிசெங்கமலமொத்த
வானனம்விழுந்தவிடமாகுமுகரம்ப
மூனமிறனங்கள்விழுந்துற்றவிடமண்மேன்
ஞானதனக்கோட்டமெனவேநவில்வர்மாதோ (59)

---

52-உந்தை-உன் றந்தை.

57-இறை-சிவன்-என்றும்-எப்போதும்

58-மின்-ஒளி. ஆன-வினைமுற்று-ஆயின வென்பது பொருள்

விரியுமிதம்பம்விழுந்ததாம்விரகமேகாட்ட
மரியபதம்விழ்ந்தவிடமாகுமுமைபாதஞ்
சுருதிபுகழ்தேவியின்மெய்துன்னுமிடந்தன்னைத்
தரைபணிசனூர்த்தனமதாவுலகுசாற்றும் (60)

இத்திறமியற்றியுமைஞானவுருவெய்தி
வித்தகமுறுங்கயிலைமேவுபொழுதாங்கே
யத்தனழற்கண்ணிலதிகோரசயவீர
பத்திரனுதித்தனன்பணிக்கிறைநடுங்க (61)

வேகமுடைவீரனொடுமேவுதுணையாக
மாகமுகடேருவுவண்மைமறமான
தேகமுடைவீரரிறைசிற்றமதிலுற்றுங்
கேகினர்களண்டநிரையாவுமசைவெய்த (62)

அக்கணமெமம்மைசினமாந்தழலிடைச்சீர்
மிக்கசெயபத்திரைவிளங்குபலகாளி
தக்கபலகாளிகளெழுந்தவதரித்துத்
தொக்கபுகழ்வீரனையடைந்தனர்தொடர்ந்தே (63)

அப்பொழுதுவீரனெமதையனையிறைஞ்சி
யிப்பொழுதழைத்ததெவனென்னையடியேற்குச்
செப்பெனமுனிற்கமுனந்தீயவுணர்தங்கண்
முப்புரமெரித்தபரன்முறுவல்செய்துரைப்பான் (64)

தக்கனுயிரும்மகந்தனைப்புரக்கவந்தோர்
மிக்கதிறலும்மவன்செய்வேள்வியுஞ்சிதைத்தே
யிக்கணமடைந்திடுதியிங்கெனவுரைக்க
வக்கடியவீரனுமடித்துணைபணிந்தே (65)

எழுந்தனனெழுந்துவிடைவாங்கியெதிரில்லா
னமுந்தவதாத்தெயிறதுக்கியளவில்லாக்
கொழுந்தெரிகனன்றமதனவேவிழிகொதிப்ப
வுழுந்துருளும்வேலைதனின்மீள்வலெனவுன்னி (66)

---

60-விரகமோட்டம்-காமக்கோட்டம்-61 பணிக்கிறை-சேடன்

அண்டமுழுதுங்கிடுகிடென்றசையவேதான்
சண்டகதிகொண்டுதனிதக்கன்மகநோக்கித்
திண்டிறல்கொளும்பரியதேரின்மிசையேறி
யெண்டகையவீரனவனேகினன்விரைந்தே (67)

இக்கடியவீரனுடனேகடிதெழுந்த
மிக்ககணபூதர்கண்மிகுந்தசினமோடு
புக்கனரடற்பகைபுடைத்திடுதுமென்று
தக்கனவன்வைத்தமகசாலையைவளைந்தார் (68)

சேனைதனையேநிறுவியேதிறல்கொள்வீரன்
றானொருவனாகமகசாலையுணடைந்தே
மோனமுடன்வேள்விபின்முகத்திலமர்தக்க
னானவொருபாதகனைநோக்கியறைவானால் (69)

அறுசீர்க்கழிநெடிலடியகவல் விருத்தம்.

இந்தமாமகத்திற்றேவர்க்கினிதவியீந்துநீயே
யந்தமிற்றுழில்களாந்தூமுடையவனாயினுபோ
பந்தமாமிமையோர்சுற்றும்பான்மைபால்யாமுமீங்கு
வந்ததுமுணர்கிலாயோமவுனமுற்றனைகொனீயே (70)

மாலயனுன்னைப்பூசைசெய்திடவந்துளாரோ
சீலமாரிமையோர்கிட்டாத்தெரிசனைக்கெழுந்துளாரோ
சாலவிவ்வுலகுக்கெல்லாமிறைவனாந்தகையுற்றாயோ
மேல்வருங்கருமமோரும்பெருமையுமேவினாயோ (71)

அங்கனையிகழ்ந்துநீதான்விருப்புடனாற்றுகின்ற
வுனதுநன்மகத்தில்வந்திங்குளமகிழ்ந்திருக்குமாலோ
டினியமாமலரோன்வானோரிவர்க்கவியீந்துநாமுன்
றனதுவேள்வியினுக்குள்ள பலனையுந்தரவந்தேமால் (72)

நானவியளிப்பேனென்றுநீகொளெண்ணமுமீங்குற்ற
வூனமாரயன்மால்வானோருனைப்புரக்கின்றவாறு
மோனமாம்வேள்விமுற்றுந்தன்மையுங்காண்டும்பேதா
யீனர்கள்செல்வம்பெற்றாவிடும்பையேவிளைப்பரன்றே (73)

ஆண்டகைவீரனிவ்வாறறைதலுமிரக்க
 வேடம்
பூண்டுவந்தவருக்கில்லையென்றிடிம்
 போவதன்றி
மீண்டுரைசெய்வதுண்டோவெனவிளம்
 பினனத்தேவர்
கூண்டபேரவையிற்றக்கனெனும்பெயர்க்
 கொடியோன்மாதோ. (74)

அத்திறமவனுங்கூறவீரனுமரனே
 பாரின்
மெய்த்தனிப்பசுக்கட்கெல்லாம்பதியென
 விளம்பும்வேத
முய்த்தவெத்தொழிற்குமீசனன்றி
 நீயுரியனுகா
யெத்தொழிலினுக்குநீயேயுரியனே
 வியம்பாயென்றான் (75)

இதற்குரையொன்றுஞ்சொல்லாத்தக்கனே
 யிடதுதாளா
லுதைத்தவன்றந்தைசென்னியுறக்கையாற்
 புடைத்துவெய்ய
கதக்கனற்கடவுளுவுங்கையுமே
 மிகவுஞ்சீறி
மதிட்டிடுதனதுசெங்கைவாளினலறுத்து
 வீழ்த்தி (76)

இரவிவானவன்றன்கண்ணையெயிற்றினைப்
 பிடுங்கியாங்கே
விரவுருத்திராக்கையால்வேலையிலெறிந்து
 தண்சங்

78-முற்றும்-முடியும்-காண்டும்-காண்போம்-இம்பை-துன்பம்.

திரன்மருத்துவரைத்தாளாற்றரையிடைத்
தேய்த்தோட்ட
வுரவசுக்களைச்சினந்தேயடித்துயிரொழித்து
விட்டான் (77)

இப்படியயற்றியாங்கேவரும்பொழு
திடதுதாளா
லொப்பருவீரன்முன்னர்தாக்கிடவுயங்
கியாக
வைப்பிடைக்கிடந்ததக்கன்வாண்முக
நிமிர்ந்துநோக்க
வெப்பனலிடைப்பெய்தானவ்வெய்யவன்றலைக்
கொய்து (78)

அக்கணர்தன்னிற்பூதகணங்கள்வந்
தடைந்துநின்ற
மிக்கதேவரைத்தங்காலால்விசும்பிடை
யெற்றிப்பின்னர்க்
கைக்கழுவாலேயேந்திக்கழியவிட்டெறிந்
துவேள்வி
நெய்க்குடமனைத்தும்வாயின்மடுத்தன
நெடுங்கைநீட்டி (79)

கரிகளைவாலிற்பற்றிக்கால்விசைத்
தெறிந்துவீரப்
பரிகளைக்குரத்திற்பற்றிப்பதைத்திடவடித்
தாங்கோமப்
பொரிகளையொன்றுக்கொன்றுபுகட்டிவாய்
குதட்டிவேள்வி

---

77-அட்டம்-எட்டு-உரம்-வலிமை-வசுக்கள்-ஒருவகைத்தேவர்
எயிறு-பல்வேலை-சமுத்திரம்-

யெரிகளிற்குதித்துக்கையாலெடுத்தெறிந்த
வித்தமாதோ (80)

போரினிற்சினவிநின்றபூதர்
களளப்பிலாத
தேரினையெடுத்துவானிற்செல்லவிட்டெறிய
விண்ணோ
ரூரினிற்புகுந்துவீரரொடித்திட
வறிதினின்ற
தாருவிற்றங்கினான்றவாவலின்றகைமை
போன்ற (81)

அஞ்சியேயகன்றுபோனோரளப்பிலர்
வீரர்கையாற்
றுஞ்சியேகழிந்துபோனோர்தொகையிலர்
துஞ்சலின்றி
விஞ்சியதேவரோடுமிந்திரன்விரைந்து
மால்பாற்
றஞ்செனக்கருதிவீழ்ந்தோர்மாற்றமுஞ்
சாற்றுகின்றான் (82)

செந்திருமார்பகேண்மோசிவகணந்
தம்மிலொன்று
வந்துவேள்வியைமாய்த்தேதக்கன்றலை
மற்றுளோர்க
டந்தலையறுத்துவீழ்த்ததென்றுதான்
சாற்றலோடு
மந்தணிகரத்துமாயோனடுக்கமுற்றெழுந்
தான்மன்னோ (83)

மகபதிமாயோன்றன்னையிறைமையாய்
வைகுவாயென்

---

80-கரி-யானை-பரி-குதிரை.
குரம்-குளம்பு-அவித்த-வினைமுற்று-அவித்தனவென்பது
பொருள்-மாது-ஓ-அசைநிலை.

நகமிகக்கொதித்துவெள்ளையானைமீதி
வர்ந்துதேவர்
மிசைவிருபாலுஞ்சூழ்ந்துநெருங்கிட
வேள்விநீங்கி
யிகல்புரிகளத்திற்போந்துவீரனையினிது
கண்டான் (84)

கோரவீரனுந்தான்கண்டுகுறுநகை
புரிந்துகற்ப
தாருவாளவனைநோக்கித்தக்கன்மா
மகத்தில்வந்து
நீரவிப்பாகம்வாங்காதிருக்கின்மீர்நீவிர்
கொள்ள
வோவிப்பாகம்பாமீங்குதவுதும்
பெறுகவென்றே (85)

இந்திரன்கரத்தைக்கொய்தாங்கியமனல்
வயிற்றைக்கீறிப்
புந்தியினிருதிவெய்யகழுத்தினைப்போக்கிப்
போரில்
வந்தவாயுவையுந்தாளைத்துணித்துயர்
வருணன்மார்பு
சிந்திடவாளாற்போழ்ந்துமதனையுஞ்சினத்
திற்றாக்கி (86)

சினமொடுவீரனின்றசெயலினைத்
தையுமேகண்டு
தனதனீசானனென்னுமிருவருந்
தாமேயஞ்சி
மனமயர்ந்தாங்குநின்றவீரனைவணங்
கியாமு
முனதடைக்கலமென்றன்னேருரைத்தலும
பயமென்றான் (87)

அருகிலவ் விருவர் தம்மை நிருவியாண் டகன்று நின்ற
பிருகுவைக் கன்னந் தன்னிற் குத்தினன் பின்னர்ச் செய்ய
மருமலர் மகளை வெண்டா மரைமலர் மகளைப் பற்றிக்
கரமலர் வருந்த விக்கி யீர்த்தனள் காளி மாதோ. (88)

விஞ்சைய ரியக்கர் சித்தர் கின்னரர் கலுழ வேந்தர்
தஞ்சிரங் கரங்கள் கால்க டடிந்துவெம் போரி லுள்ள
மஞ்சின விமையோர் போற்ற வபயமீந் தாண்மை வீரன்
மஞ்சுடு வதிர வெற்றி வலம்புரி நாதஞ் செய்தான். (89)

இசைத்திடு சங்க நாத மிருசெவி வெதும்பக் கேட்டு
விசைத்தெழுந்தரியுஞ்செங்கட் கலுழன்மேல்விரைவினெய்தி
வசைத்திர முடைய தேவர் மாண்டதும் வாணி செய்பாள்
புசத்திடைப் பிணிப்பும் வீரன் புயவரை வலியு நோக்கி. (90)

திருமகள் கொழுநன் வீரன் றிருமுக நோக்கித் தக்க
னொருவனே தீமை செய்ய வும்பரை யொறுக்க லாமோ
பொருவிலா விறலோய் நீயா ரென்றலும் பொங்கு தீப்போ
லிருவிழி சிவந்து வீர னிளநகை புரிந்து கூறும். (91)

ஆன்மக னுனக்குக் கர்த்தன் யானென வறைந்து பின்னர்த்
திரமுடை யுலகி ரட்சை செய்புநீ யிங்கு வைக
வாமுடைத் தேவர் மாளுந் தன்மையும் வலாங் கொல்லோ
தாமுடைப்புகழ்சேர்வானோர் தமைப்புரந்திடவொண்ணுதோ

வசையுற விவ்வா றோது மாற்றமால் செவியிற் கேளா
விசையுடன் றிகிரி தன்னை விடுத்தலும் வீரன் றோளின்
மிசைபுனை நலயி லொன்று விழுங்கின போது சென்னி
யசைதர வாளோன் றேச்ச வதுபொடி யாகிற் றன்றே. (93)

அக்கணந் தண்ட மொன்றை யேவினு னதுவும் பஞ்சா
யுக்கபின் பகழி மாரி பொழிந்தனன் பொழித லோடு
மிக்கவெங் கணையொன் றேவி வில்லையு மறுத்தம் மால்கைத்
தக்கதோர் சங்கம் பற்றிக் கொடுத்தனன் பூதர் தம்பால். (94)

(91) திருமகள்-இலக்குமி. கொழுநன்-கணவன்.

மாயவன் ருனும் பின்னர்ப் பலபல வடிவ முற்றுக்
காயெரி யென்னச் சிறிப் பொருதனன் கனன்று வீர
னேயபல் லுருவாய் நின்று பொருதுபின் னெதிர்த்த மாய
னேய்வுறு மாறு மார்பி லடித்தலு மயக்க முற்றான். (95)

மாதவன் மயக்க முற்ற வாறுகண் ணுதலு மோர்ந்தப்
போதுமை யொடுவெள் ளேற்றிற் றோன்றியே புலவர் தம்மைக்
காதிய வீரன் றன்னைத் திருக்கையா லமைத்த காலைத்
தாதவிழ் கடுக்கை வேணிச் சங்கர னடியிற் றாழ்ந்தான். (96)

அமலன்வெள் விடையின் மீதே யாங்கெழுந் தருளக் கண்டு
கமலநான் முகனு மாலுங் கற்பக நாட்டு வேந்துந்
தமதுமா மயக்க நீங்கித் தடங்கணீ ரருவி சோர
வுமையொரு பாகா காவென் றோலமிட் டடியில் வீழ்ந்து. (97))

தேவர்க டேவா போற்றி செகப்பசு பதியே போற்றி
பூவலர் கடுக்கை வேணிப் புண்ணியா போற்றி யாஞ்செய்
பாவம்யா வையுமே போக்கும் பரஞ்சுடர்க்கொழுந்தேபோற்றி
தாவறு கயிலை மேவுந் தாணுவே போற்றி யென்று. (98)

துதிபுரிந் திறைஞ்ச லோடு முமையவ ளிரங்கிச் சோதி
மதிதவழ் சடையி னானை வணங்கியென் னூலே புந்தி
றுதியிழந் திழிவு பெற்று நொந்தன ரந்தோ வேறு
கதியில ரிவரைக் காத்துக் கருணைசெய் தருள்க வென்றாள்.

விமலையி துரைப்ப வண்ணல் வீரபத் திரனை நோக்கி
யிமையவர் கமலை வாணி யிறந்துளோ ரிரிந்து ளோர்க
டமையளித் திடுமா றிங்குன் றாயுனை வேண்டி னாளென்
றமலனு மருள வீர னமரரை யெழுப்பிப் போந்தான். (00

ஈசனை யெய்தி யன்னோ ரிறைவனே போற்றி பாவ
நாசனே போற்றி முக்க ணாதனே போற்றி யன்பர்
நேசனே போற்றி யெங்கு நிறைபரம் பொருளே போற்றி
மாசிலா மணியே போற்றி வரதனே போற்றி போற்றி. (101)

---

(96) மாதவன்-அரி. (97) அமலன்-சிவபெருமான்.

(100) விமலை-உமையவள். கமலை-இலக்குமி. வாணி-நாமகள்.

தாமரைப் பொகுட்டின் மேவிச் சராசரம் படைப்பாய் போற்றி
காமரு துளவ மாலைக் கடவுளாய்க் காப்பாய் போற்றி
தோமறக் கடையில் வந்தே யாவையுந் துடைப்பாய் போற்றி
தேமலர்க் கொன்றை வேணிச் செல்வனே போற்றி போற்றி.

உற்பவ மிறுதி யென்னு முபயமு மொழித்தாய் போற்றி
கற்பகக் கனியே போற்றி களமிடற் றவனே போற்றி
யற்புதச் சுடரே போற்றி யண்டநா யகனே போற்றி
தற்பரா னந்தா போற்றி சங்கரா போற்றி போற்றி. (103)

இன்னணமவர்கள்போற்றியிறைஞ்சலுமிருக்கையீந்து
முன்னவன் றக்க னெங்கே யென்றலு மொழிவான் வீர
னன்னவன் றலையை வன்னி யருந்தின தாலே யாட்டுச்
சென்னிய னாக நின்று னென்றலுஞ் சிரித்துப் பின்னர். (104)

பொங்குதெண் டிரையு லாவும் புணரிசூழ் நெடிய வைய
மெங்கணு நிறைந்து மேவு மெம்பிரா னுங்கு நின்ற
பங்கயச் செங்கண் மாயோ னாதியாய்ப் பகரும் வானோர்
தங்களை நோக்கிச் சொல்வான் றண்ணருள்சுரந்துமாதோ. (105)

புகழ்பெறு நமக்கீ யாம லுள்ளவி புழுவை யொக்கு
மிகழ்தரு மலத்தை யொக்கு மெனக்கட வல்லி யென்னப்
பகருப நிடதஞ்சொன்ன படிபவம் புரிந்தீர் பாவ
மகலுறச் சென்மி னீவி ருபயமா புரத்தி லன்றே. (106)

அந்நக ரிருந்தோ ராண்டு பூசிப்பீர் நமையென் றந்தப்
பொன்னமர் மார்பி னானை வேதனைப் புகன்றுபின்னர்
மன்மத னிரதி மானு மதியுடுக் கணதிட் சேப
நன்னதி தனிற்சு வேத நளினமா மலரா மன்னே. (107)

நந்துலா நதியின் பாங்கர் நான்மறை தருப்பை யாக
விந்திரன் சயந்த னிந்தி ராணிவெவ் வெயின ராக
வந்துறு பிதிர்கள் கங்கா வயங்கெரி சுணங்க னாக
வந்தகன் பன்றி யாக நிருதியோ ருழுவை யாக. (108)

---

(104) சென்னி-தலை.

புனலிறை யென்கா வாயுப் பொருந்தும்வெண் கழுக தாகத்
தனபதி நான மாகத் தக்கவீ சான னேரு
வினவுகின் னரர்கள் சித்தர் மிளிர்பசுங் கிளியாத் தக்கன்
புனையுமுத் தாவா யிற்கண் பொருந்திநின் றிடுபே யாக. (109)

அருக்கர்பன் னிருவர் தாமு நீபமா வருகி னின்ற
மருத்துமா மாமா வட்ட வசுக்கள்பூம் பனச மாக
வுருத்திர ரகிலாத் தக்க னுடைப்பெருந் தம்பி மார்கள்
விருப்புறு வில்வ மாக மேருக்கன் மலைய தாக. (110)

வானுல குறையு மின்னு ரிலதையா வயங்கு காம
தேனுவோர் சுரபி யாகத் திகழ்தரு கற்ப தாருத்
தானுமுள் விருக்க மாகத் தங்குக நெடுநா ளென்றைந்
தானன னுரைக்க வப்போ தத்தருத் தொழுது கூறும். (111)

அண்ணலே யுலகு தன்னி லவரவர் மனத்தி லுள்ள
வெண்ணமே யுணர்ந்து நல்கென் றெனக்கருள் புரிந்தா யானும்
பண்ணிய பாவ மென்னோ வென்றது பகர ஞானக்
கண்ணுத லிரங்கி நம்பாற் களவென வருக வென்றும். (112)

உம்பருக் கருளு முன்ன முனக்கருள் புரிது மென்று
மெம்பிரான் கூறப் பின்ன ரிமையவ ரயன்மா லேனோர்
வெம்புமஞ் ஞானத் தால்யாம் புரிபிழை பொறுத்தல் வேண்டு
நம்பரா வென்னப் போற்ற நாயக னருளிச் செய்வான். (113)

ஒப்பரும் புகழ்சேர் தூய வுபயமா புரமென் றோது
மப்பெரும் பதியிற் சென்றே யமர்ந்திடு நீவிர் செய்த
தப்பரும் பாவந் தீர்த்துந் தமைப்புரந் திடுவோ மென்று
செப்பியே வீர னோடு மிறையவன் கயிலை சேர்ந்தான். (114)

என்பது சூதன் கூற விருந்தவ முனிவர் யாரு
மன்புடன் மகிழ்ந்து வாழ்த்தி யநாதிமா புரத்தின் காதை
யின்பவா ரமுதை யின்னு மெமக்கருத் துகவென் றோத
மன்பெருங் கருணை கூர்ந்து மாதவ னியம்பு வானால். (115)

தக்கன் வேள்விச் சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் 20-க்கு திருவிருத்தம் 686.

---

பதினன்காவது

## கற்பகதருக் களாவான சருக்கம்.

### கலிவிருத்தம்.

மருக்கமழ் கொன்றையந் தொடையல் வானவன்
பெருக்குறு திருவருள் பெற்று வானிடை
யிருக்குமக் கற்பக மினிது வந்துபூந்
திருக்களா வாயதோர் சரிதஞ் செப்புவாம். (1)

### வேறு.

தருவைநறுங் களவாயத் தலத்திடைவந் திடுதியென
வருளியதா லஃதெழுந்தே யருட்குறிக்கீ சானமதின்
மருவிரிதண் களாவனமாய் வைகியதக் களவினுடைப்
பெருமையையாமெடுத்துரைப்போங் கேண்மினுயர்பெருந்தவத்
தீர். (2)

உலகிலுள தருமமெலா மொருகுழுவாய்த் திரண்டெழுந்தே
யலகில்புகழ்க் களாவனமா யவதரித்த தெனவுதித்து
மலரிலைதண் கனிகாய்கள் கோடுபல வாகமல்கிக்
குலவுதருத் தெரிசித்தாற் கொடுக்குநினைத் தனவனைத்தும். (3)

அம்மலரின் றண்ணறவே யபிடேக மாகமலர்
செம்மலுக்கர்ச் சனையாகச் செழுங்கனிநை வேதனமாக்
கம்மிசையோங் கியபசும்பூங் களவினிழல் கவிகையதா
விம்முமது கரவொலியே விரும்புறுமின் னிசையாக. (4)

கோடுகணின் றசைவதுவே குழகனது திருமுன்ன
மாடுறுநாட் டியமாக வளப்பரிய நெடுநாளன்
போடுயர்பூ சனைபுரிந்தாங் கொருகாலஞ் சுரர்வடிவாய்
நாடரிய சிவன்றனையே தோத்திரஞ்செய் திடுளொன்று. (5)

முக்கணனக் களவினுக்கு முன்றோன்றி நீயுலகின்
மிக்கநெடு நாளிருக்க விளைந்ததுமுன் னலன்றோ

---

(2) தரு-கற்பகதரு. அருட்குறி-சிவலிங்கம்.

(5) கோடு-மரக்கொம்பு. சுரர்வடிவு-தேவர்வடிவம்.

'வக்கதையா முரைக்குதுங்கே ளமரரெலாம் பாற்கடலிற்
புக்கமுதங் கடைந்திடுமப் போதமுதத் துளிவீழ்ந்தே. (6)

சீர்திகழு மமுதபிந்து வெனச்சொலுமோர் திருத்தலத்திற்
கூர்கடுக்கொள் வதரியென நம்மருகிற் குலவியநீ
யேர்பெறுகற் பகதருவா யிருக்கவிரும் பினையவ்வா
ரூர்வமுட னியிருக்கு மங்காளி லொருஞான்று. (7)

இருமையுள சத்தியைப்பூ சனைபுரியா தெமைப்பூசை
புரிதலுற்றான் பிருங்கியுமை பொருமலவன் றன்னுடலிற்
குருதிதசை நரம்பெவையுந் தன்கூறென் றவள்கொளலான்
மருவுசத்தி யிலனாகி மனதின்மிகத் துயரடைந்து. (8)

புத்தியுளே மாயிருந்தும் புகர்புரிந்தோ மெனக்கருதிப்
பத்தியுடன் மனவொருமை தானுற்றுப் பன்மலராற்
சத்தியையு மெம்மையும்பூ சனைபுரிந்தா னிலிங்கத்தி
னத்தகா ரிச்சுரா வெழுந்துநெரி சனையளித்தேம். (9)

உற்றதனை நாரதன்ரு னுணர்ந்துமக பதிதனக்குச்
சொற்றனனங் கவனெழுந்து தோன்றினனேங் தருவுடனே
நற்றளிர்நன் மலர்களினா னமைப்பூசித் திருந்தனனப்
பொற்றருநன் னிழலளித்துப் புரிந்ததெமக் குவகையரோ.

மகபதிக்கு வேண்டியநல் வரமளித்துத் தருவுடனே
புகவிடுத்தோஞ் சுவர்க்கமதி னீமனதிற் புரிந்தபடி
யகல்விசும்பு தனிலடைந்தாங் கமரர்கோ னருகிருக்க
மிகவுமளித் திடுதருவாய் மேவுவா யெனவிளம்ப. (11)

வானவர்கோ னநித்தியமாம் வாழ்வுடையோ னாதலினால்
யானிசையே னென்றுரைத்தா யித்தலம்போ கத்தைநல்கு
மானதனாற் றருவாய்வின் னடைந்தாசை தீருதிநம்
பான்மிகுபோ கத்துடனே மோக்கமருள் பதியளிப்போம். (12)

புக்கிருவென் றுரைத்திடலும் போய்த்தருவா யிருந்துபின்னுந்
தக்கமக சாபத்தா னியுமிந்தத் தலத்திடைநம்

---

(7) வதரி-இலந்தை. (10) ஐந்தரு-சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பக மென்பன.

